சேசுவின் இராச்சியம் வரும்படியாக மாதாவின் இராச்சியம் வருக!
- அர்ச். லூயிஸ் மரிய மோன்போர்ட்



"நீயாவது எனக்கு ஆறுதலளிக்க முயற்சி எடு."

# மாதா பரிகார மலர்




ஜனவரி & பிப்ரவரி - 2022
மலர் 43 இதழ் 1 & 2

சேசுவின் இராச்சியம் வரும்படியாக மரியாயின் இராச்சியம் வருக!
- அர்ச். லூயிஸ் மரிய மோன்போர்ட்

## ஜெபமாலை போரணியில் சேர வாருங்கள்!

சேசுமரியாயின் அன்புள்ள நேச இருதயங்களுக்கு உலக மக்களின் பாவங்களுக்காக பரிகாரம் செய்து ஆறுதலளிக்க விரும்பும் அன்பான சேசு மரிய அப்போஸ்தலர்களுக்கு அன்பான வேண்டுகோள். உலகத்தில் எப்பொழுதெல்லாம் தம் தாயாரின் பாதுகாப்பையும் மகிமையையும் தன் பிள்ளைகள் உணரவேண்டும் என்று சர்வேசுரன் விரும்புகிறாரோ அப்பொழுதெல்லாம் தேவதாய்க்கென ஒரு சேனையைக் கடவுள் தன்னுடைய பரிசுத்த குருக்கள், துறவிகள், ஏன் சில சமயங்களில் தன்னுடைய விசுவாசிகள் மூலமும் இந்த சேனையை உருவாக்குகிறார். நமது அர்ச். பத்தாம் பத்திநாதர் சபையின் சங்கைக்குரிய பேத்ரீஸ் லாரோச் சுவாமி (Patrice Laroche) அவர்களுடைய சகோதரர் திரு லூயிஸ்-பியர்லரோச் (Louis - Pierre Laroche ) இவர் 11 குழந்தைகளுக்கு தந்தையானவர். இவர் ஆஸ்திரியா நாட்டில் வாழ்ந்து வருகிறார். கொடிய கொரோனா வைரஸிலிருந்து தேவதாய் இவ்வுலகத்தைக் காப்பாற்றவும், நம்மை ஆள்பவர்கள் இந்த கஷ்டமான சூழ்நிலையில் நிலைமை இன்னும் மோசமாக மாறாமலிருக்க உதவவும், மக்கள் உண்மையான சுதந்திரத்தை மீண்டும் அடையவும் உதவும்படி ஒரு மாபெரும் பரிசுத்த ஜெபமாலை போரணியை ஆஸ்திரியா நாட்டில் கடந்த டிசம்பர் மாதம் ஆரம்பித்துள்ளார். இந்த ஜெபமாலை மகத்துவத்தின் பாதுகாப்பை விசேஷமான முறையில் பல தடவை அனுபவத்தில் உணர்ந்த நாடு ஆஸ்திரிய நாடு ஆகும். இந்த ஜெபமாலை போரணி பொதுவான ஒரு மக்கள் கூடும் இடத்தில் ஆஸ்திரிய அரசிடம் அனுமதி பெற்று ஆரம்பித்துள்ளார். ஒவ்வொரு புதன்கிழமை மாலை 6 மணிக்கு மெழுகுவர்த்தி ஏந்திக்கொண்டு ஜெபமாலை மற்றும் மாதா பாடல்களுடன் (30 நிமிடங்கள்) நிறைவுபெறுகிறது.

இந்த ஜெபமாலை போரணி இன்று ஏறக்குறைய 22 கிறீஸ்தவ நாடுகளில் பரவியுள்ளது. நமது அர்ச். பத்தாம் பத்திநாதர் சபை குருக்களின் ஆதரவுடன் சிறப்பாக நடைபெற்று வருகிறது. இந்த ஜெபமாலை இயக்கத்தில் நீங்களும் இணைந்து வருகிற பிப்ரவரி 16 முதல் ஒவ்வொரு புதன்கிழமை மாலை 6 மணிக்கு குழுவாக கூடி மெழுகுவர்த்தி ஏந்தி ஜெபமாலை ஜெபித்து மாதா பாடல்கள் பாடி ஞானபலன்களை பெற்றுக்கொள்ளும்படி உங்கள் அனைவரையும் அன்போடு அழைக்கிறேன். இதை உங்களுடைய இல்லத்திலோ, அல்லது பங்குஆலயத்திலோ, அல்லது ஒரு பொதுவான இடத்திலோ சேர்ந்து ஜெபிக்கலாம். “கூடி ஜெபிக்கும் குடும்பம் தேவதாயினுடைய அடைக்கலத்தில் வாழ்கிறது” என்பதனை மறவாமல் லூர்திலும், பாத்திமாவிலும் மாதா கேட்டுக்கொண்டபடி ஜெபமாலையை ஜெபிப்போம். தேவமாதாவின் பாதுகாவலின் அடைக்கலத்தை உணர்வோம்.

மேலும் உலகமெங்கும் வாழக்கூடிய கத்தோலிக்க தமிழர்கள் தேவதாய் பாத்திமாவில் கேட்டுக் கொண்ட முதல் சனி பக்தியை அனுசரித்து அவர்களுடைய மாசற்ற இருதயத்தின் வெற்றிக்காக உழைக்க வேண்டும். மேலும் MI என்ற அமலோற்பவ போரணியில் இன்னும் சேராதவர்கள் ஒவ்வொருவரும் உறுப்பினர்களாக சேர்ந்து அமலோற்பவ தேவதாயினுடைய விசேஷ பாதுகாப்பில் வளர அனைவரையும் அன்புடன் அழைக்கிறேன்.

**"Nos cum prole Pia, benedicat Virgo Maria"**

“நேசமிகு திவ்விய குழந்தையுடன் ஆசீர்வதிக்கப்பட்ட கன்னிமரியம்மாள் நம்மை ஆசீர்வதிப்பாராக.”

சேசு மரிய சூசையில் உங்கள் ஆன்ம குரு,
Rev. Fr. **ஜோசப் ராஜதுரை,** SSPX
பாளையங்கோட்டை, தமிழ்நாடு.

# உலகில்
# சேசுவின் இராச்சியம் வரும்படியாக, மரியாயின் இராச்சியம் மலர, உழைக்க முன் வாருங்கள்!



## எல்லா மாதா பிள்ளைகளுக்கும் மாதா அப்போஸ்தலர்களுக்கும் அவசர அழைப்பு!!



*நேயர்களே, மாதாவின் பிள்ளைகளே!*

*இன்று உலகம் 2022 - ம் ஆண்டினை எட்டியிருக்கிறது. வழக்கமான மகிழ்ச்சியுடனும், சமாதானத்தோடும் தான் இந்த புத்தாண்டை உலகம் வரவேற்கிறா? இல்லை, என்று தான் கூற வேண்டும். ஏனெனில் இன்று உலகம் தனது வரலாற்றிலேயே முன் எப்போதும் கண்டிராத பயங்கரமான அச்சுறுத்தலை அனுபவித்துக் கொண்டிருக்கிறது. கொரோனா என்ற நோய் தொற்று கடந்த இரண்டு வருடங்களாக உலகமெங்கும் பரவி கோடிக்கனக்கான மனித உயிர்களை காவு கொண்டுவிட்டதை நாமறிவோம். கடந்த காலங்களிலெல்லாம் பிளேக், காலரா போன்ற நோய் தொற்றுக்கள், நாட்டின் ஒரு குறிப்பிட்ட பகுதிகளில் தோன்றி நடவடிக்கைகளுக்குப் பின் மறைந்து விடும். ஆனால், இப்போது தோன்றியிருக்கும் கொரோனா நோய் தொற்று உலக அளவில் பரவி பெருவாரியான நாடுகளை முடக்கிப் போட்டு, பெரும் அழிவை கொண்டு வருவதை செய்திகள் மூலம் அறிகிறோம். கொரோனா நோய் உருமாறி டெல்டா வைரஸ் என்றும், ஓமைக்ரான் தொற்று என்றும் புதிய அவதாரமெடுத்து உலக மக்களை பயமுறுத்தி வருவதையும் நாம் காண்கிறோம். இதற்கு தடுப்பூசிகள் கண்டு பிடிக்கப்பட்டாலும் அவற்றின் நம்பகத் தன்மை, மற்றும் பின்விளைவுகள் பற்றிய செய்திகளும், வதந்திகளும் மனிதனின் எதிர்காலத்தையே கேள்வி குறியாக்கியுள்ளது!*

*இந்த ஆபத்துக்கள் போதாதென்றால் போல், இன்று மனுக்குலம் கடவுள் மறுப்பு லோகாதாய கம்யூனிச கொள்கையால் பீடிக்கப்பட்டு சிருஷ்டிகராம் கடவுளை விட்டு வெகுதூரம் சென்று விட்டது. அதோடு உலகிற்கே ஞான வழிகாட்ட வேண்டிய சத்திய கத். திருச்சபை இன்று தன்நிலையை மறந்து, மறுத்து உலகத்தோடு ஒத்துப் போய்க் கொண்டிருக்கிறது. விளைவு :* Lock out *- பொது அடைப்பு என்ற பெயரில் தேவாலயங்கள் அடைக்கப்பட்டு தேவ வழிபாடுகள் நிறுத்தப்பட்ட அவலங்களும் நடந்தேறி வருகின்றன.*

*இவ்வாறு கடவுளின் ஞான உதவிகளையும், ஆறுதல்களையும் இழந்து, உலக வாழ்விலும் நிச்சயமற்ற நிலைமையில் வாழும் மக்கள் திகைத்துதான் போய் இருக்கிறார்கள். இந்த நிலையில் தான் வழக்கம் போல் புதிய ஆண்டு பிறந்திருக்கிறது!*

## நம்பிக்கையின் வானவில்!

**"***மனுக்குலம் கடவுளிடம் திரும்பாத வரையிலும் இந்த தற்போதைய துன்பதுயரங்கள் முடிவுக்கு வராது***"** என்ற பாப்பரசர் 15-ம் ஆசீர்வாதப்பரின் எச்சரிக்கையை நாம் நினைவில் கொள்வோமாக ! (1917, டிசம்பர் 24 -Allocution ). ஆம்! கலங்கி நிற்கும் மனுக்குலம் கடவுளிடம் திரும்ப வேண்டும். அன்று பழைய ஏற்பாட்டின் காலத்தில் ஜலப்பிரலயத்துக்குப் பின்னர் கடவுள் இஸ்ராயேல் மக்களிடம் இனிமேல் பூமியை ஒரு போதும் சபிப்பதில்லையென்று வாக்களித்து ஓர் உடன்படிக்கையைச் செய்தார். அதன் அடையாளமாக தம்முடைய **வானவில்லைக்** காட்டினார்: "*. . . நாம் பண்ணுகிற உடன்படிக்கையின் அடையாளம் இதுவே. நமக்கும் உலகிற்கும் உள்ள உடன்படிக்கைக்கு இதுவே அடையாளமாகும். ஆதலால்,* **மேகங்களால் வானம் மறைந்திருக்கும் போது நம்முடைய வில் அங்கே காணப்படும்.**" (ஆதி. 9:13,14). உலகை காப்பதற்காக சர்வேசுரன் செய்து கொண்ட உடன்படிக்கையின் அடையாளமாக அவரது **வானவில்** திகழ்ந்தது!. அவரிடம் மக்கள் மனந்திரும்பி வரக் காரணமாக இருந்தது!

அதுபோலவே, இன்று பாவங்கள் மலிந்து, பெருக்கெடுத்து ஆன்ம அழிவை நோக்கிச் சென்று கொண்டிருக்கும் பிந்திய கால மனுக்குலத்தை எச்சரித்து காப்பாற்ற கடவுள் பாத்திமா வானத்தில் **பரிசுத்த கன்னிமாமரி** என்ற தமது வானவில்லைத் தோன்ற செய்தார். கடவுளின் பாதுகாப்பை இன்றைய மனுக்குலத்துக்குப் பெற்றுத்தரும்படியாக தேவதாய் காட்டப்பட்டார்கள். உலகை அழிவிலிருந்து காத்து இரட்சிக்கும் பரலோகத் திட்டங்களையும். உபாயங்களையும் அத்தாய் வழியாக அறிவித்தார்.

## முன்னறிவிக்கப்பட்ட வெற்றி!

பாத்திமாவில் தோன்றிய தேவதாய் ஆன்மாக்களை நித்திய நரகப் பேரழிவிலிருந்து காப்பாற்ற உலகில், தமது **மாசற்ற இருதயத்தின் மீதான பக்தியை** ஏற்படுத்தும் கடவுளின் விருப்பத்தை வெளிப்படுத்தினார்கள். (1917 - ஜூலை 13). மேலும் உலகின் பழிபாவங்களால் வரவிருக்கும் தண்டனைகளையும் எடுத்துக் கூறி, அவைகளைத் தடுத்து நிறுத்தும் வழிவகைகளாக :

1. ரஷ்ய ஐக்கிய அர்ப்பணத்தையும்
2. முதல் சனி பரிகார பக்தியையும் தந்தார்கள் (காண்க : பாத்திமா காட்சிகள் புத். பக். 62)

பின்னர் **". . . இறுதியில் என் மாசற்ற இருதயம் வெற்றிபெறும். பாப்பரசர் ரஷ்யாவை எனக்கு ஒப்புக் கொடுப்பார். அது மனந்திரும்பும். உலகிற்கு ஒரு சமாதான காலம் கொடுக்கப்படும். . ."** (1917 ஜூலை 13 காட்சியில்) என்ற நம்பிக்கையூட்டும் மாபெரும் முன்னறிவிப்பினை வெளியிட்டார்கள்.

காலங்களைக் கடந்த சர்வேசுரன் நித்தியமானவர். அவரது விருப்பங்களும், திட்டங்களும் என்றும் மாறாதவையாதலால் 1917-ம் வருடத்தில் தேவதாய் மூலமாக அவர் முன்னுரைத்த **மரியாயின் மாசற்ற இருதய வெற்றியும்**, அது கொண்டு வரும் **சமாதான காலம்** பற்றி வாக்குறுதியும் அவை நிறைவேறும் வரையிலும் மாறாதவைகளே என்பதை நினைவில் கொள்வோமாக! நூறு வருடங்களைக் கடந்தும் மாதாவின் வெற்றியும் அதுதரும் ஆசீர்வாதங்களும் நமக்காக காத்துக்கொண்டிருக்கிறது என்பதை நாம் உணர வேண்டும. அவைகளை பெற்றுக் கொள்ள உலகம் இன்னமும் தயாராக இல்லை என்பதே உண்மை!

# சேசுவின் இராச்சியமும் - மரியாயின் இராச்சியமும்!!

*எந்த ஒரு தனிநபரோ, அரசோ எதிர்காலத்தில் எதிரிகளின் மீதான தமது வெற்றியினை அறிவிக்க முடியாது. ஆனால், தேவதாய் தனது வெற்றியை அறிவிக்கிறார்களென்றால், அவர்களின் வல்லமையையும், கடவுளிடம் அவர்கள் கொண்டிருக்கும் அளப்பரிய செல்வாக்கினையும் உணர்ந்து கொள்ளலாம். மேலும் இந்த வெற்றி ஆதி சுவிசேஷத்தில் குறிப்பிடப்பட்ட, சர்வேசுரனால் சாத்தானோடு மூட்டப்பட்ட பகையால் விளைந்து, அவராலேயே நிர்ணயிக்கப்பட்ட* **". . . உனக்கும் , ஸ்திரீக்கும், உன் வித்துக்கும் அவள் வித்துக்குமிடையே பகையை உண்டாக்குவோம். அவள் உன் தலையை நசுக்குவாள். . . "** *(ஆதி. 3:15). வெற்றியாகும். இப்படி வெற்றி பெற்றவர்கள் நிச்சயம் அரசாள தகுதியும், பெற்றவராகையால் அவர்களுக்கான இராச்சியபாரமும், மக்களும் இருக்குமல்லவா? அதனைச் சுட்டிக் காட்டும் விதமாகவே* **சமாதானகாலத்தை** *வாக்களித்துள்ளார்கள். சமாதான காலம் யாருக்காக இருக்கும்? வெற்றி பெற்றவரின் பிரஜைகளுக்கானது தானே?! ஆக, மாதாவின் வெற்றிக்குப் பின்னர் வாக்களிக்கப்பட்ட சமாதான காலம் மரியாயின் ஆளுகைக்குட்பட்ட அவர்களது இராச்சியமாக இருக்கிறது! அது சர்வேசுரனுடைய இராச்சியம், இப்பூமியில் வருவதாக இருக்கும். அதாவது கிறீஸ்து அரசரின் இராச்சியம்!!*

*இதனைப் பற்றியே அர்ச். லூயிஸ் மரிய மோன்போர்ட் "மிகவும் ஆசீர்வதிக்கப் பெற்ற கன்னிமரியாயின் வழியாகவே சேசுகிறீஸ்து உலகிற்கு வந்தார். அது போலவே அக்கன்னி மரியாயின் வழியாகவே அவர் உலகில் அரசாளவும் வேண்டும்" (மரி. மீது. உண். பக்தி எண் 1) என்று உரைக்கிறார். அதாவது* **"சேசுவின் இராச்சியம் வரும்படியாக மரியாயின் இராச்சியம் வரும்"** *என்பதாகும்.*

*இதுபற்றி குறிப்பிடும் போது பாத்திமா காட்சி பெற்ற சகோதரி லூஸியா : "ரஷ்யா மனந்திரும்பியதும். அப்படி நடக்கும் "என்று கூறியுள்ளாள். ஆக, மாதாவின் வெற்றிக்கும் பின் வரும் சமாதானக்காலம் அவர்களது இராச்சியமாக இருக்கும் என்பது புலப்படுகிறது.*

*மாதாவின் வெற்றி ரஷ்ய ஐக்கிய அர்ப்பணத்தோடு இணைந்துள்ளது. ரஷ்யா உலக மேற்றிராணிமார்களோடு ஐக்கியமாக பாப்பரசரால் மரியாயின் மாசற்ற இருதயத்துக்கு பகிரங்கமாக, ஆடம்பரமாக அர்ப்பணிக்கும் போது மாதாவின் அரசுரிமையை அவர்கள் அரசி என்ற அந்தஸ்தை திருச்சபையும், உலகமும் அறிந்து ஏற்று கொண்டதாக அமையும். பாப்பரசர் மாதாவின் பரிகாரப் பக்தியை அங்கீகரித்து திருச்சபையெங்கும் அனுசரிக்கக் கட்டளையிடுவார். இதன் மூலமாக* **"மரியாயின் மாசற்ற இருதயப் பக்தி, சேசுவின் திரு இருதயப் பக்திக்கு இணையாக வைக்கப்படும்."** *இதனால், ரஷ்யா மாதாவின் மன்றாட்டால் கம்யூனிச தப்பறையிலிருந்து கத்தோலிக்க விசுவாசத்துக்கு மனந்திரும்பும். உலகமெங்கும் சத்திய கத்தோலிக்க விசுவாசம் புதுமையாக தளைத்தோங்கும். உலக தீமைகள் ஒழிந்து, சமாதானம் நிலவும். கடவுள் - மனிதன் உறவாகிய உள்ளரங்க ஞான சமாதானம் ஏற்பட்டு அது உலக அமைதிக்கு வழியாகும்.*

*சத்திய கத்தோலிக்க திருச்சபை தனது பாரம்பரியத்துக்குத் திரும்பி, எங்கும் ஆன்ம இரட்சண்யத்துக்கு ஏதுவாகும். பொதுவாக, மரியாயின் இராச்சியம் சேசு கிறீஸ்துவின் இராச்சியத்திற்கு மிகச் சிறந்த தயாரிப்பாக இருக்கும். அதோடு "இந்த இராச்சியத்தில் தேவதாய் கன்னிமாமரி பரலோக இராக்கினியாகவும், பூலோக அரசியாகவும், கடவுளின் சேனைகளின் தளபதியாகவும், அவரது திரவியங்களை வைத்துக் காப்பவராகவும், அவருடைய வரப்பிரசாதங்களை*

*விநியோகிப்பவராகவும், தேவனுடைய அற்புதங்களை இயற்றுகிறவர்களாகவும், வீழ்ந்துவிட்ட மனுக்குலத்தை மீண்டும் எழுப்புகிறவராகவும், மக்களின் மத்தியஸ்தியாகவும், கடவுளின் பெருமைகளிலும் வெற்றிகளிலும் உறுதுணையாகவும் மாதா இருப்பார்கள்" (மரி. மீ. உண். பக்தி எண் 28) என்று மாதாவின் இராச்சியத்தைப் பற்றி அர்ச். லூயிஸ் மரிய மோன்போர்ட் கூறுகிறார்.*

## மாதா அப்போஸ்தலர்களுக்கு அழைப்பு!

*திருச்சபையின் துவக்க காலத்தில் நமதாண்டவர் தமது சுவிஷேசத்தை உலகமெங்கும் அறிவிக்க அனுப்பட்ட தமது சீடர்களை* **அப்போஸ்தலர்கள்** *என்று அழைத்தார். அவர்கள் சேசுவின் நற்செய்தியை - பரலோக இராச்சியத்தை அறிவித்து பரவச்செய்தார்கள். இந்த பிந்திய கடைசி காலங்களில் மாதாவின் பிள்ளைகளை அர்ச். லூயிஸ் மரிய மோன்போர்ட்,* **"பிந்திய காலங்களின் அப்போஸ்தலர்கள்"** *என்று அழைக்கிறார். பொதுவாக சேசு மரிய இருதயங்களின் மீது அன்பால் பற்றியெரியும் ஆன்மாக்கள் மாதா அப்போஸ்தலர்களாகத் தகுதியானவர்கள்.*

*இந்த ஆபத்தான பிந்திய காலத்தில், குறிப்பாக புலர்ந்துள்ள புதிய ஆண்டில்* **சேசுவின் இராச்சியம் வர மரியாயின் இராச்சியம் மலர** *மாதாவின் பிள்ளைகளும், அப்போஸ்தலர்களும் உழைக்க அழைக்கப்படுகிறார்கள்.*

*மாதாவின் வெற்றி துரிதமாக்கப்பட, மாதா கேட்டுக் கொண்ட ரஷ்ய ஐக்கிய அர்ப்பணம் நடைபெற வேண்டும். ரஷ்ய அர்ப்பணம் செய்யப்பட, தேவையான தேவ வரப்பிரசாதங்களை பாப்பரசர் பெற்றுக் கொள்ளவேண்டும் அதற்கு மரியாயின் மாசற்ற இருதயத்துக்கு எதிராகப் செய்யப்படும் நிந்தைகளுக்கு (பாவங்களுக்கு) பரிகாரம் செய்ய வேண்டும். அதாவது* **முதல் சனி பரிகாரப்பக்தியை** *அனுசரிக்க வேண்டும். மக்கள் எவ்வளவுக்கு இப்பக்தியை அனுசரித்து மன்றாடுகிறார்களோ அந்த அளவுக்கு ரஷ்ய அர்ப்பணம் விரைவுபடும். அதனைச் செய்ய பாப்பரசர் போதிய வரப்பிரசாதத் திடனை பெறுவார்.*

*எனவே மாதா அப்போஸ்தலர்கள் தங்களையே மாதாவழியாக சேசுவுக்கு அன்பின் அடிமைகளாக ஒப்புக் கொடுத்து, சாத்தானுக்கு எதிராக போராடும்* **அமலோற்பவியின் வீரர்களாக** *ஜெபதவ பரித்தியாக முயற்சிகளை செய்து, மாதாவின் பரிகாரப் பக்தியை தாமும் அனுசரித்து பாரெங்கிலும் அதனைப் பரப்பவும், தேவதாய் அதிகமாக அறியப்படவும், நேசிக்கப்படவும், மதிக்கப்படவும், சங்கிக்கப்படவும் அவர்களது பக்தியை பரப்பி* **மரியாயின் இராச்சியம்** *வரும்படியாக உழைக்க வேண்டும். அதன் மூலம் சேசுவின் இராச்சியம் உலகில் பெற்றுக்கொள்பவர்களாவோம்!*

*நம்பிக்கையின் வானவில்லான தேவதாயின் தப்பாத உதவியை மன்றாடி, அவர்களிடம் நம்மை ஒப்படைத்து* **சேசுமரிய இருதயங்களுக்கு** *உகந்த வாழ்வு வாழ்ந்தால் கொரோனா என்ன? எந்த ஒரு கொடிய ஆபத்தும் நம்மை அணுகாது. எனவே, நாம் கடவுளிடம், மனந்திரும்பி அவர் நமக்கு தந்த வானவில்லான* **மாமரியை** *நம்பிகையோடு நோக்குமோமாக! அவர்களிடம் நம்மையே அடைக்கலமாக ஒப்படைப்போமாக.*

*இப்படி மாதாவின் அன்பின் அடிமைகளாக, வீரர்களாக உழைத்து உலகில்* **சேசுவின் இராச்சியத்தைப்** *பெற்றுக்கொள்ள சமாதான காலமாகிய* **மரியாயின் இராச்சியம்** *இந்த ஆண்டிலேயே மலர விரும்பி, உழைப்போமாக!*

**சேசு மரிய இருதயங்கள் எங்கும் துதிக்கப்படுவதாக!**

*- மரியாயே வாழ்க!*

# தேவமாதாவை அறிந்து கொள்வோம்

*(வரப்பிரசாத முறையிலும் இயற்கையின் தன்மையிலும் மகிமையின் பெருமையிலும் அற்புதங்களின் அற்புதமாகத் திகழும் தேவமாதாவை நம்மால் அறிந்து கொள்ள முடியுமா? ஒருபோதும் முடியாது ! ஆனாலும் அவர்கள் நமது தாய் என்ற உரிமையில் அறிந்துகொள்ள முயலுவோமாக. ஆ.ர்.)*

## ஐந்தாம் சலுகை

## மாதா பிதாவாகிய சர்வேசுரனின் அன்புள்ள குமாரத்தியாயிருக்கும் மகிமை

நம் அன்புள்ள தேவதாயாரை **பிதாவின் மகள், சுதனின் தாய், இஸ்பிரீத்து சாந்துபின் நேசம்** என்று காலாகாலமாய் திருச்சபை பாராட்டி வருகிறது.

*"பிதாவாகிய சர்வேசுரனுடைய குமாரத்தியே! சுதனாகிய சர்வேசுரனுடைய தாயாரே! இஸ்பிரீத்துசாந்துவாகிய சர்வேசுரனுக்கு மிகவும் பிரியமுள்ள நேசமே!"*

*என்று தொடங்கும் பழங்கால ஜெபம் தமிழகக் கத்தோலிக்கர்களுக்கு மிகவும் பழக்கப்பட்ட ஒன்றாகும்.*

*ஜெபமாலையின் முதல் மூன்று அருள்நிறை மந்திரங்களைச் சொல்லும் போதும் "பிதாவாகிய சர்வேசுரனுடைய குமாரத்தியாகிய பரிசுத்த தேவமாதாவே, எங்களிடத்திலே தேவ விசுவாசம் என்கிற புண்ணியம் உண்டாகி பலனளிக்கும்படி உம்முடைய திருக்குமாரனை வேண்டிக் கொள்ளும்" என்று தொடங்கும் மூன்று மன்றாட்டுகளும் நமக்குத் தெரியும்.*

*மாதா என்றால்,* **பிதாவின் செல்வ மகள், சுதனின் அன்புத் தாய், பரிசுத்த ஆவியின் ஞானப்பத்தினி** *என்பதெல்லாம் அவ்வன்னைக்கு இயல்பாகவே ஏற்பட்டவை என்று நாம் உணர்ந்து கொள்ள முடியும்.*



## வேத பிதாக்களின் போதனை

*நம் மாதா, பிதாவாகிய சர்வேசுரனின் செல்வ மகள் தான்.*

*இப்பெரும் "வரப்பிரசாத சலுகை தன்னுடையது என்பதை மாதாவே வேதாகமத்தில் கூறியுள்ளார்கள்" என அர்ச். அல்போன்ஸ் மரிய லிகோரியார் தெளிவாய்ச் சொல்கிறார். "மரியம்மாள் ஜென்மப் பாவம் படராமல்*

முழு விடுதலை பெற்றிருப்பது பொருத்தமே: ஏனென்றால் அவர்கள் பிதாவின் மகளாக - பிதாவின் முதல் மகளாக இருக்கிறார்கள்: "நானே சிருஷ்டிகளுக்கெல்லாம் முந்தி சிருஷ்டிக்கப்பட்டேன்" (சர்வ 24:5) என்கிறார்கள். இவ்வார்த்தைகளை புனித வேதபாரகர்களும், வேத பிதாக்களும், திருச்சபையுமே மாதாவைக் குறிப்பதாக மாதாவின் அமலோற்பவ திருநாள் உரைகளில் கூறியுள்ளனர்" - என்கிறார்.

மாதா தன் திருக்குமாரனுடன் இணைந்தவர்களாகவே முன் குறிக்கப் பட்டதனால். பிதாவின் முதல் குமாரத்தியாக இருக்கிறார்கள் என்று டான்ஸ் கோட்டஸ் என்ற வேதபாரகரும் அவரைப் பின்பற்றுகிறவர்களும் கூறுகிறார்கள். வரப்பிரசாத முறையில், இரட்சகரின் தாயாக மாதா முன்குறிக்கப் பட்டதால் பிதாவின் **தலை மூத்த மகளாக** இருக்கிறார்கள் என்று அர்ச். தாமஸ் அக்வினாசும், அவரைப் பின் செல்கிற வேத அறிஞர்களும் கூறுகிறார்கள். ஆக வேத இயல் அறிவில் சிறந்த அனைவருமே மாதாவை பிதாவாகிய சர்வேசுரனின் முதல் குமாரத்தி என்பதை ஒப்புக் கொள்கிறார்கள்.

அலெச்சாந்திரியா மேற்றிராணியாராயிருந்த டெனிஸ் என்பவர், இன்னும் ஒருபடி தாண்டி மாதாவை "ஜீவியத்தின் ஒரு மகள் - ஒரே மகள் கன்னிமரி அன்னையே" என்கிறார். (contra Pa. samgt.) மற்ற அனைத்து மகள்களும் பாவத்திற்குட்பட்டதால் மாதா மாத்திரமே கடவுளின் குமாரத்தியாக இருப்பதாக அவர் கூறுகிறார்.

## ஆதி சுவிசேஷத்தில்...

சிருஷ்டிப்பில், ஏவாள் கடவுளின் மகளாக ஆதாமிலிருந்து உண்டாக்கப்பட்டாள். இந்த மகள் கீழ்ப்படியாமல் பாவஞ்செய்த போது கடவுள் சாத்தானைப் பார்த்து இவ்வாறு கூறினார் :

"உனக்கும் ஸ்திரீக்கும், உன் வித்துக்கும் அவள் வித்துக்கும் பகையை உண்டாக்குவோம். அவள் உன் தலையை நசுக்குவாள்." (ஆதி 3:15) என்று ! இதுவே ஆதிசுவிசேஷம் எனப்படுவது.

இங்கே "அவள் வித்து" என்று கடவுள் குறிப்பிடுவது தம் தெய்வீகக் குமாரனாகிய சேசுவையே "ஸ்திரீ" யையும், "அவள் வித்"தையும் ஒரே சீராக ஒப்பிட்டுக் கூறுகிறார். அந்த வித்து கடவுளின் குமாரனானால் அந்த ஸ்திரீ அவருடைய குமாரத்தியல்லவா? ஆனால் ஒரு வேறுபாடு மட்டும் : அந்தக் குமாரனாகிய சுதன் சிருஷ்டிக்கப்பட்டவரல்ல. அந்த ஸ்திரீயாகிய மாமரியோ சிருஷ்டிக்கப் பட்டவர்கள்தான். சிருஷ்டியாகிய மாதா சிருஷ்டிகளுடன் ஒன்றாக, சர்வேசுரனின் குமாரத்தியாக உயர்த்தப்பட்டிருக்கிறார்கள்.

## வம்ச உறவு

தாய்மை சேய்மை என்பவை வம்ச பரம்பரையைக் குறிப்பிடுகின்றன. கடவுளின் தாய் மாமரி என்றால் - மரியாயின் சேய் கடவுள் என்றால், கடவுளுடன் மாதாவுக்கு உண்மையான வம்ச பரம்பரை உறவு எற்படுகிறது. அதாவது - மாதா கடவுளின் குடும்பத்தில் உட்படுகிறார்கள். அவர்கள் சிருஷ்டிகராயிராமல் சிருஷ்டியாக இருப்பதால், அக்குடும்பத்தில் மகளாகவே இருக்க முடியும். பிதாவின் மகளாக அவர்கள் உயர்த்தப்பட்டிராவிட்டால் சுதனின் தாயாக இருக்க இயலாது என்பது பொருள். இதையே அர்ச். பெர்னார்டின் என்பவர் இவ்வாறு குறிப்பிடுகிறார் :

கன்னிமாமரி கடவுளின் தாயாகும் பொருட்டு ஒரு அளவற்ற வரப்பிரசாதத்தினால் ஒரு தெய்வீக தகுதிக்கு உயர்த்தப்பட

வேண்டியிருந்தது! - (serm. 61. 16) அர்ச் தமியான் இராயப்பரும் : "கடவுள், பொருள் ஒருமைப்பாட்டினால் மரியாயிடம் தங்கியிருந்தார்: ஏனென்றால் அவரே அவர்களாயிருந்தார்!" என்று கூறுகிறார் (De Nat. Ving.) - மாதாவுக்கு கடவுளுடன் இவ்வித ஒருமைப்பாடு தரப்படாதிருந்தால் அவர்கள் அவருடைய அன்னையாயிருக்க முடியாது - தகுதிபற்றாது. ஆனால் மாதா முழுத்தகுதி பெற்ற தேவதாயாக இருக்கிறார்கள் என்று புனித லூயிஸ் மரிய மோன்போர்ட் கூறுகிறார் "மாமரி இறைவனின் தகுதி பெற்ற தாய் இங்கு எல்லா நாவும் மௌனமாகக் கடவன" (மரி.மீ.உ.பக்தி.12) என்கிறார். அதாவது இம்மறை பொருளை முழுவதும் மனிதனின் அளவற்ற அறிவுக்கு எட்டும்படி எடுத்துரைக்க இயலாதென்பது கருத்து. ஆகவே கடவுளின் வம்ச பரம்பரைக்குட்பட்டிருக்கிற நம் கன்னி மரி மாதா அக்குடும்பத்தில் மூத்த குமாரத்தியாக அதாவது, பிதாவின் மகளாக இருக்கிறார்கள் என்பது தெளிவாகிறது.

## திருச்சபை வழிபாட்டில்...

திருச்சபையின் வழிபாட்டிலும், மாதா பிதாவின் மகளென்று அழைக்கப்படுகிறார்கள். கான்ஸ்தாந்திநோபிளில் தளைத்து வளர்ந்த பைசாந்தின் வழிபாட்டு ரீதியில் (By Zantine Rite) மாதா பிறந்த நாள் (செப்டம்பர் 8) கட்டளைச் செபத்தில்:

**கடவுளின் மகளான மரியம்மாள் இந்த உலகத்திற்கு அனுப்பப்படுகிறாள்**. பரலோகமும், பூலோகமும் மகிழட்டும். கிறீஸ்தவர்களின் மகிமையான கன்னிகையே வாழ்க!" என்று மாதாவுக்குத் துதி கூறப்படுகிறது.

மேலும், "சிருஷ்டிகரின் உள்ளத்தினின்று முதன் முதலாய்ப் பிறப்பிக்கப்பட்ட கன்னிகையே" (O Prina Virgo Prodita e conditoris spriritu...) என்று பரலோக மாதா திருநாள் கட்டளைச் செபப்பாடலில் காணப்படுகிறது.

"ஆண்டவரால் ஆசீர்வதிக்கப்பட்ட மகளே" (Benedicta filia tu a Domino) என்று மாதாவின் பொது கட்டளைச் செப சங்கீத முன்னுரையில் கூறப்படுகிறது.

## மகள் வழி தாயாம்

திரிஏகரான கடவுளை வைத்துப் பேசினால் கடவுளின் "வம்ச வழி" மகள் வழி தாயாம் என்றே கூற வேண்டும். ஏனென்றால் திரியேக தேவனுக்கு அடுத்த பிதிர் (வரிசை) மாதாதான். மாதாவுக்குப் பிறகே மற்ற அனைத்து சிருஷ்டிகளும். மாதா வழியாகவே சிருஷ்டிகள் கொடை அனைத்தையும் பெற்றுக் கொள்கின்றன. கடவுளின் அளவற்ற வல்லமையும் வரப்பிரசாதங்களும் மாதாவிலேயே மற்ற சிருஷ்டிகளுக்குக் காணப்படுகிறது.

இங்ஙனம், கடவுளின் வல்லமையைப் பெற்றுள்ள நம் அன்னையின் முன் சாத்தான் நின்று கொள்ளமாட்டான். "மரியா"யின் பெயரைக் கூட பொறுக்க அவனால் முடியாது. "மரியாயே" என்ற நாமமே சாத்தானுக்கும் அவன் சகாக்களுக்கும் மிக பயங்கரமாகவும், வெறுப்பாகவும் இருக்கிறது. தேவ புத்திரனைப் பிள்ளையாகப் பெற்றெடுத்த **தேவபுத்திரி, பிதாவின் குமாரத்தி, கடவுளின் செல்வ மகள்** நம் அன்புக்குரிய தாய் கன்னிமரி மாதாவேயாம்! அவர்களை கபிரியேல் தூதன் மூலம் பிதாவாகிய சர்வேசுரனே வாழ்த்தியபடி நாமும் "**அருள் நிறைந்த மரியாயே வாழ்க**" என்று வாழ்த்துவோம்.

- மரியாயே வாழ்க!

**புதிய தொடர்:**

# மரியாயின் மீது உண்மைப்பக்தி விளக்கம்

**அத்தியாயம் 1**

## அர்ச். கன்னி மரியாயின் மீது பக்திகொள்வதன் அவசியம்



**“மரியாயின் சுவிசேஷம்”** *என்று அழைக்கப்படும் அர்ச். லூயிஸ் மரிய போன்போர்ட் எழுதிய* **மரியாயின் மீது உண்மை பக்தி** *என்ற நூலின் விளக்கம் இங்கே வெளியிடப்படுகிறது. மாமரியைப் பற்றி இந்த பெரிய அர்ச்சிஷ்டவர் எழுதியுள்ள நூலை விளக்க நம்மால் ஆகாது எனினும், தன் குழந்தையின் திக்குமொழியும் தாய்க்கு விருப்பமாவது போல், நம் அன்பு அன்னை இதனை ஏற்று ஆன்மாக்களுக்குப் பயன்படும் வண்ணம் ஆசீர்வதிப்பார்களாக. இக்கட்டுரைத் தொடரின் கருத்துக்ககள் மாதா அப்போஸ்தலர்கள் சபையின் ஸ்தாபகர் சங். அந்தோனி சேவியர் சுவாமிகள் எழுதிய, வெளியிட்ட ஆவனங்களிலிருந்து தொகுக்கப்படுகிறது. (ஆ.ர்.)*

**“Nunquam satis de Maria” - மரியாயைப் பற்றி போதிய அளவு ஒருபோதும் கூறமுடியாது** *(அர்ச். பெர்னார்டு) என்று மாபெரும் புனிதர்கள் கூறியிருக்க, நம்மில் சிலர் மாதாவைப் பற்றி தேவைக்கு மேல் கூறப்படுவதாக! நினைக்கிறார்கள். பேசுகிறார்கள்.*

*பதிதக் கொள்கையுடைய சிலர் மாதாவை நாம் கடவுளாக ஆக்குகிறோம் என்று குற்றம் வேறு சாட்டுகிறார்கள்.*

*ஆனால், மாமரி உந்நத சர்வேசுரனின் கரத்திலிருந்து வந்த ஓர் சிருஷ்டிதானென்றும், அவருடைய அளவற்ற மகத்துவத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது ஒரு அணுவிலும் சிறிய பொருள் தான் அல்லது ஒன்றுமே இல்லை - ஏனென்றால் சர்வேசுரன் ஒருவரே இருக்கிறவர் (யாத் 3 :14) என்றும், அகில திருச்சபையுடன் நான் ஒப்புக் கொள்கிறேன் என்று அர்ச். லூயிஸ் மோன்போர்ட் குற்றஞ்சாட்டுகிறவர்களுக்கு சத்தியத்தின்படி பதிலளிக்கிறார். கடவுள் சுயமாக இருப்பவர் சுயமாகச் செயல்படுகிறவர். எனவே, எப்போதும் சுயாதீன சுதந்திரமுடையவரும் சுயநிறைவு கெண்டவருமான ஆண்டவராகிய கடவுள், தமது சித்தத்தை நிறைவேற்றவும், தம் மகிமையை வெளிப்படுத்தவும் மகா புனித கன்னி மரியாயை ஒரு தவிர்க்க முடியாத தேவையாகக் கொண்டதில்லை. இப்பொழுதும் கொள்வதுமில்லை. எதையும், செய்வதற்கு அவர் அதை விரும்புவதே போதுமானது.*

*ஆகவே கடவுளின் சித்த நிறைவிற்கோ அவருடைய செயல்பாடுகளாகிய சிருஷ்டிப்பு, இரட்சிப்பு அல்லது அர்ச்சிப்புக்கோ யாரையும் சார்ந்திருக்க வேண்டிய அவசியம் கடவுளுக்குக் கிடையாது. கட்டான இந்த முறைப்படி பார்த்தால் கடவுளுக்கு உதவி செய்ய யாரும் தேவையில்லை.*

*மனிதன் அறிந்த கடவுள் - இலக்கணப்படி இவ்வாறு நாம் கூறுகிறோம். ஆனால் கடவுளுக்கும் கட்டுப்பாடுகள் விதிப்பவன் யார்?.*

*இவ்வளவு சுயாதீனமும் சர்வ வல்லமையும் கொண்டிருக்கிற சர்வேசுரன், நடைமுறையில் ஆற்றியுள்ள அருஞ்செயல்களைப் பார்த்தால் வேறு ஒரு தேவ உண்மை புலப்படுகிறது. அது :*

*எல்லாம் வல்லவருக்கு ஒன்று மற்றது தேவைப்படுகிறது !*

*எதுவுமில்லா "அடிமையானவளுடைய தாழ்மையை" எல்லாமுள்ள இறைவன் "கிருபாகடாட்சத்தோடு பார்த்தருளினார்" (லூக் 1 : 48)*

*"நடந்துள்ள காரியங்களை அப்படியே பார்க்கும் போது" என்று அர்ச். லூயிஸ் கூறுவது, கடவுள் கடவுளாக இருப்பதைத் தவிர்த்த மற்ற அனைத்தையும், சேர்த்துக் கூறுகிறார். கடவுளின் செய்லபாடுகள் அனைத்தையும் பார்க்கும் போது,*

*"சர்வேசுரன் மரியாயை உண்டுபண்ணியதிலிருந்து தம் மிகப்பெரும் செயல்களை ஆரம்பிப்பதும் முடிப்பதும் மாமரியாலேயே" என்று அர்ச். லூயிஸ் கூறுகிறார்.*

*கடவுளின் மிகப்பெரும் செயல்களுக்குள்ளே, அவருடைய மிகச்சிறு செயலும் அடங்கும் அவருக்குள்ளேயே அனைத்தும் அடங்குவது போல!*

*ஆகவே கடவுளின் செயல்கள் யாவுமே மாமரியிடமே தொடங்கவும், முடியவும் செய்கின்றன!*

*மேலும், கடவுளின் இந்த செயல்முறை இனி ஒருபோதும் மாறவும் செய்யாது. என்று அர்ச். லூயிஸ் கூறி அசைக்கமுடியாத காரணத்தையும் அதற்குக் கூறுகிறார்.*

*"அதாவது தாம் கடவுளாக இருப்பதால், இனிமேல் அவர்தம் திட்டத்தை மாற்றமாட்டார். தம் உணர்தல்களிலும், செயலாற்றும் முறையிலும் மாறவும் மாட்டார்" என்கிறார்.*

*நிலைபெற்ற பரம்பொருள் நிலையற்ற விதமாய் மாறி மாறி செயல்படமாட்டார் என்பதே இதன் பொருள்.*

*அப்படியானால் தமதிரித்துவக் கடவுள், மாமரியிடமல்லாது வேறு யாரிடமும் எதையும் தொடங்குவதுமில்லை, முடிப்பதுமில்லை; மரியாயின் வழியாயல்லாது கடவுள் செயல்படுவதில்லை என்னும் பேருண்மை நிரூபிக்கப்படுகிறது.*

*இத்தகைய உயர்வுடையவர்கள் நம் நேச மாதா என்று அறியும் நம் இருதயங்கள் மகிழ்ச்சியால் நிரம்புகிறதல்லவா?*

*நாம் மீட்பும், அர்ச்சிப்பும் அடைய வேண்டுமானால் அவர்கள்மீது பக்தி கொள்வது அவசியம் என்பதும் தெளிவாகிறதல்லவா?*

**(மரி.மீது உண். பக்தி, எண் 14 & 15)**

*- மரியாயே வாழ்க.!*

# பாரம்பரிய திரிதெந்தீன் லத்தீன் திவ்ய பலிபூசை திரும்ப வரவேண்டும்! புதுப்பூசை அகற்றப்படவேண்டும்! ஏன்?!



திவ்யபலி பூசை என்பது நமதாண்டவர் சேசுகிறீஸ்துவால் பெரிய வியாழனன்று ஏற்படுத்தப்பட்டு, மாறா அப்போஸ்தல பாரம்பரியமாக திருச்சபையால் பரமபிதாவுக்கு ஒப்புக்கொடுக்கப்படும் சேசுநாதருடைய புதிய உடன்படிக்கையின் **பாவப்பரிகாரக் கல்வாரிப் பலியே** ஆகும். அப்போஸ்தலர்கள் காலத்திலிருந்து தொன்றுதொட்டு திருச்சபையெங்கும் பரவி, உரோமன் கத்தோலிக்க திருவழிபாட்டின் சிகரமாக விளங்கும் இப்பலிபூசை 16-ம் நூற்றாண்டில் திரிதெந்தீன் பொதுச்சங்கதால், புராட்டஸ்டாண்ட் பதிதத்திலிருந்து பாதுகாக்க அப்போதைய பாப்பரசர் அர்ச். 5-ம் பத்திநாதரால் நித்திய கைங்கரியமாக அங்கீகரிக்கப்பட்டதாலும் சம்மனசுக்களின் மொழி என்று அழைக்கப்படும் திருச்சபையின் லத்தீன் மொழியில் இப்பூசை செய்யப்பட்டு வருவதாலும் திரிதெந்தீன் லத்தீன் திவ்யபலிபூசை என்றும் அழைக்கப்பட்டு வருகிறது.

2000 வருடங்களாக திருச்சபை அர்ச்சித்து எண்ணற்ற அர்ச்சிஷ்டவர்களை உருவாக்கி திருச்சபை எங்கும் புனிதத்தை பொழிந்து வந்த இந்த பூசை, கடந்த 1969-ம் ஆண்டு திடீரென்று நிறுத்தப்பட்டு, அதன் இடத்தில் பிராந்திய மொழியிலான நவீன பூசை புகுத்தப்பட்டு விட்டது. பாப்பு 6-ம் சின்னப்பரின் பெயரில் அறிமுகம் செய்யப்பட்ட இப்பூசை 2-ம் வத்திக்கான் சங்க பரிந்துரைகளின் நடைமுறை என்று சொல்லப்பட்டது. விசுவாசமும், பக்தியும் நிறைந்த கத்தோலிக்க மக்கள் புது அறிமுகத்தால் சற்று திகைத்தாலும் கொஞ்சம் கொஞ்சமாக, காலங்கள் செல்லச் செல்ல அதில் பழகிப் போனார்கள். பாழாகிப் போனார்கள். ஆம்! புதுப்பூசை கத்தோலிக்கத் திருச்சபையையே தலைகீழாகப் புரட்டிப் போட்டது. வழிபாடு எப்படியோ அப்படியே விசுவாசமும் மாறிபோனது. 2-ம் வத். சங்கத்தின் தப்பறையான போதனைகள் திருச்சபையில் ஊடுருவி, அதனை ஆட்கொண்டு சங்கச் சபையாக - 2-ம் வத். சங்கத்தைப் பின்பற்றும் சபையாக மாற்றிப் போட்டன. இன்று நாம் இருப்பது சங்கச் சபையில் தான். ஆக, 2-ம் வத். சங்கம் ஒரு புது வழிபாட்டை புகுத்தி, ஒரு புது

*சபையை உருவாக்கியுள்ளது. இன்று நாம் திருச்சபையில் காணும் விசுவாச மறுதலிப்பு, குருக்களின் தாறுமாறான போதனைகள் மற்றும் நல்லொழுக்கச் சீர்கேடுகள் போன்றவற்றின் ஊற்றுக்கண் இந்த 2-ம் வத். சங்கம் தான்! அதன் புதுமதம் - சங்கச்சபை* (Councilar Church)**;** *புதுப்பூசை - புராட்டஸ்டாண்ட் பதித அம்சங்களைக் கொண்ட புதிய ரீதியிலான பலியில்லாத கொண்டாட்டம்.*

## எதிர்ப்புக்குரல்கள்!

*புதுப்பூசையின் அம்சங்களையும், தன்மைகளையும் ஆராய்ந்த திருச்சபையின் பிரமாணிக்கமுள்ள கர்தினால்மார்கள், ஆயர்கள் மற்றும் வேதசாஸ்திரிகள்,* **புதுப்பூசை கத்தோலிக்க விசுவாசத்துக்கு முரணானது**, *என்று கண்டறிந்தார்கள். இந்த ஆய்வின் முடிவை, அப்போதைய திருச்சபை வேத சத்தியங்களின் பாதுகாப்புச் சங்கத்தின் தலைவரான கர்தினால் ஒட்டவியானியும், கர்தினால் பாக்சி ஆண்டகையும் 1969 செப்டம்பர் 25-ம் தேதி பாப்பரசர் 6-ம் சின்னப்பருக்கு அறிவித்தனர்.*

*விசுவாசத்துக்கு முரணான புதுப்பூசையை நிறுத்திவிட்டு பாரம்பரிய பலிபூசைய உடனடியாக மக்களுக்குக் கொடுக்கும்படி விண்ணப்பித்தனர். அதன் முக்கிய அம்சங்கள் கீழ் வருமாறு :*

1. **பரிசுத்த பிதாவே, தாங்கள் கொண்டு வந்துள்ள புதிய பூசையானது திரிதெந்தீன் பொதுச்சங்கத்தின் 22-ம் அமர்வில் கொடுக்கப்பட்ட வேதசத்தியங்களுக்கு நேர்மாறுபட்டதாக இருக்கிறது.**

2. **அம்மாறுபாட்டை நியாயப்படுத்த தாங்கள் காட்டியுள்ள மேய்ப்புப்பணி சார்பான காரணங்கள் போதுமானவையல்ல.**

3. **உங்களால், புகுத்தப்பட்டுள்ள மாற்றங்களினால் கத்தோலிக்க மக்கள், தாங்கள் எப்போதும் விசுவசித்து வந்துள்ள சத்தியங்கள் மாற்றப்படலாம் அல்லது விட்டுவிடப்படலாம், அதில் தவறில்லை" என்ற மனநிலையைப் பெற்று வருகிறார்கள்.**

4. **ஆகவே, திருச்சபையின் விசுவாசமும் ஐக்கியமும் சிதைந்து வரும் இந்நேரத்தில், கத்தோலிக்க உலகமெங்கும் விரும்பிப் போற்றப்படுகிற பாரம்பரிய பலிபூசையை தொடர்ந்து செய்ய தாங்கள் உடனே உத்தரவிடும்படி விண்ணப்பிக்கிறோம். (காண்க :** The OTTAVIANI INTERVENTION - Letter to Po pe Paul VI 25 Sep. 1969).

*இந்த விண்ணப்பம் ஏற்கப்பட்டதா? இல்லை! விளைவு!*
*வரப்பிரசாதக் குறைவு*
*விசுவாசத் தளர்வு.*

*- எண்ணற்ற கத்தோலிக்க விசுவாச மறுதலிப்பு, அதனால் விளையும் ஆன்மாக்களின் சேதங்கள் - இழப்புக்கள்.*

*நேயர்களே ! இன்று நமது கத்தோலிக்க திருச்சபையிலே - சமுதாயத்திலே சீரழிவும், விசுவாச தளர்வும், விசுவாசமின்னையும் எங்கும் காணப்படுகிறதே, விசேஷமாக குருக்களிடமும் துறவியரிடமும்! பாரம்பரிய மெய்யான பலிபூசை ஏறக்குறைய முற்றிலும் நிறுத்தப்பட்டு அழிக்கப்பட்டுவிட்டதால் இவை நேரிட்டுள்ளன என்பதை மறுக்க முடியுமா? "சமாரியாவில் பஞ்சம் கொடுமையாயிருக்கிறது."(3 அரசர் 18:2) என்பதை யார் மறுப்பார்கள்?*

*ஆம், பஞ்சம்! தேவ வரப்பிரசாதப் பஞ்சம்! புதுப்பூசை வந்ததிலிருந்து தேவ வரப்பரிசாதம் குறைந்துள்ளதை யாரும் மறுக்க முடியாது. பெருவாரியான விசுவாச மறுதலிப்பும், ஆயிரக்கணக்கான குருக்கள் துறவியர் தேவ அழைத்தலை விட்டுச் செல்வதும், அதற்குச் சான்றுகள். இவை எப்போது திருந்தும்? பாரம்பரிய மெய்யான பலிபூசை வந்தாலான்றி இச்சீர்கேடு திருந்தாது. புதுப்பூசை அகற்றப்பட வேண்டும்.*

*எப்போது இது நடக்கும்? அதற்கு வெகுகாலம் கடக்க வேண்டுமா? அது வரை சத்திய கத்தோலிக்க விசுவாசத்தை, கத்தோலிக்க நல்லொழுக்கப் போதனைகளை விட்டுவைப்பார்களா?*

*ஆனால், இந்த புத்தாண்டிலே தேவபராமரிப்பின் மேலான இரக்கத்தினால் பாத்திமாவில் ஒலிக்கும்* **"என் மாற்ற இருதயம் வெற்றி பெறும்! சமாதானக் காலம் கொடுக்கப்படும். . . "** *என்ற நமதன்னை பரிசுத்த கன்னிமாமரியின் நம்பிக்கையின் வெற்றியின் குரலொலிக்கு செவிசாய்ப்போமாக. அத்தாய் முன்னுரைத்துள்ள வெற்றி துரிதமாக இவ்வாண்டிலேயே நிறைவேற சேசுமரிய இருதயங்கள் கேட்டுக் கொண்டுள்ள பரிகார பக்தியை அனுசரிப்போமாக. தேவ அன்னையின் ஜெபமாலை ஆயுதத்தை கையிலெடுத்து ஜெபித்து ஆயத்தமாவோமாக!*

**சத்திய திருச்சபையின் மாதாவே எங்களுக்காக வேண்டிக்கொள்ளும்!**

*- மரியாயே வாழ்க!*

---

# 33 நாள் தயாரிப்பு!

## (மாதாவின் பிள்ளைகளே! மாதா அப்போஸ்தலர்களே!)

வரும் பிப்ரவரி மாதம் 20-ம் தேதி துவங்கி, மார்ச் மாதம் 24-ம் தேதியில் முடிவடையும் நாட்களில் 33-நாள் தயாரிப்பை செய்யுங்கள். மார்ச் 25-ல் மாதா வழியாக அன்பின் அடிமைகளாக சேசுவுக்கு உங்களை அர்ப்பணியுங்கள். இதுவரை இதனை செய்யாதவர்கள் புதிதாகத் துவங்கவும், ஏற்கெனவே அர்ப்பணம் செய்தவர்கள் அதனை புதுப்பிக்கவும் அழைக்கப்படுகிறார்கள்!

# சேசுவின் பாலத்துவத்தின் அர்ச்சியசிஷ்டவர் அர்ச்.சூசையப்பர்

பரலோக பிதாவினால் இவ்வுலகத்துக்கு அனுப்பப்பட்டவரும், நமது மனுஷீகத்தைப் பூண்டு கொண்டவருமான தேவசுதனை நம் கண்முன் ரூபிகரித்து ஆராதிப்போம். இவர் மனுஷாவதாரம் பண்ணினாரே, இப்பரம இரகசியத்துக்கும் அர்ச். சூசையப்பருக்கும் உள்ள சம்மந்தத்தைக் கண்டுபிடிக்க பிரயாசைப் படுவோம். இதற்கு இரண்டு காரியங்களை நாம் கண்டுணர வேண்டும். **முதலாவது:** இப்பரம இரகசியம் நிறைவேறுவதற்கு அவர் செய்த உதவி என்ன? **இரண்டாவது:** அவ்வுதவியை அவர் எப்படிச் செய்தார்?



**மனிதாவதாரம் நிறைவேற அர்ச். சூசையப்பர் செய்த உதவி** : மூன்று விதமாய் உதவினார். முதலாவது : மனிதாரத்தின் பரம இரகசியத்தில் சூசையப்பருக்கு ஓர் பதவி கொடுக்கப்பட்டிருந்தது. ஆனால் அவர் சேசுவின் கைத்தந்தையாக மாத்திரம் இருந்தபடியால் அதில் அவர் நேரடியாகச் சம்பந்தப்படவில்லை. மாமரி மாத்திரமே அதில் நேரடியாகச் சம்பந்தப் பட்டவர்கள். ஏனெனில் தேவதூதனிடம் அவர்கள் தாம் கடவுளின் தாயாவதற்கு சம்மதித்தபடியால், திவ்ய இஸ்பிரீத்து சாந்துவானவர் மாமரியின் உதரத்தைக் கொண்டு சேசுவின் பரிசுத்த மனுஷீகத்தை உருவாக்கினார்.

இந்த பரம இரகசியம் நிறைவேற ஓர் நிபந்தனை நிறைவேறவேண்டியிருந்தது. அதற்கு அர்ச். சூசையப்பரின் உதவி தேவையாயிருந்தது. அதெப்படியெனில், இரட்சகரின் உற்பவமும், பிறப்பும் கற்புள்ளதாகவும், மரியாயின் கன்னிமை பழுதுபடாததாகவும் காப்பாற்றப் படவும் வேண்டியிருந்தது. இதற்காகத்தான் சூசையப்பர் மரியாயின் **கன்னிமையின் காவலனானார்**. இந்த தமது பதவியை அவர் மிகுந்த உத்தம விதமாய் நிறைவேற்றினார். விவாகத்துக்கு முன்னரும், பின்பும் மாமரியின் கன்னிமையை நிலைநாட்டபட்ட அந்தஸ்தாக மதித்து அதனைக் காக்கும் காவலனாகத் துலங்கினார்.

பரிசுத்த மரியம்மாளை மணம் புரியும் போது, மனுஷாவதாரத்தின் பரம இரகசியம் நிறைவேறுவதற்கு இசைவான மனமும் குணமும் உடையவராய் இருந்தார். உண்மையாகவே அவருடைய கற்புள்ள விவாகம், இரட்சகர் இவ்வுலகிற்கு வருவதற்கு இறுதி ஆயத்தமாக இருந்தது. அர்ச். சூசையப்பரும்

*அதற்கு இசைவாகவே நடந்து கொண்டார். அவரது விரத்தத்துவம் மனுஷாவதாரத்துக்குத் தேவையான நிபந்தனையாக நித்திய காலமாய் சர்வேசுரனால் திட்டம் செய்யப்பட்டிருந்தது. அர்ச். சூசையப்பரின் கன்னிமைவிவாகம் மாமரியாயின் கன்னிமைக்கும், அவர்களிடமிருந்து பிறக்கவேண்டிய திவ்விய சேசுவின் பரிசுத்தத்துக்கும் அவசியமான அனுசரனையாகக் குறிக்கப்பட்டிருந்தது. அர்ச்.அகுஸ்தீனார் கூறுவது போல், சூசையப்பர் தமது கன்னிமையினாலேயே சேசுவுக்குத் தந்தையானார்.*

**இரண்டாவது :** *இரட்சகரின் மனுஷீகத்தை பராமரிப்பதற்கடுத்த பதவி அர்ச்.சூசையப்பருக்கு தரப்பட்டிருந்தது. இரட்சகரைக் காக்கவும், வளர்க்கவும், போஷிக்கவும் வேண்டிய கடமை அது. திவ்ய பாலனுக்கு அளவற்ற ஞானமும், வல்லபமும் திரவியங்களுடைய பிதா பரலோகத்தில் இருந்தார். அப்பிதா தமது ஞானத்தையும், தமது திருக்குமாரன் மட்டில் தனக்குள்ள சிநேகத்தையும் காண்பிப்பதற்காக, இவ்வுலகில் அவரைப் போஷித்து ஆதரிக்க தமக்குப் பதிலாய் தந்தையாக சூசையப்பரை நியமித்தார். அர்ச்.சூசையப்பரும் தமது கைவேலையால் தம்மிடம் ஒப்புவிக்கப்பட்ட மானிட தேவனை பராமரித்து காப்பற்றினார். ஏரோதனிடமிருந்து பாலனின் உயிரைக் காப்பாற்றி பாதுகாத்தார். சேசுமீது அயராத அன்பு நேசம் கொண்டு நாசரேத்தூருக்கு திரும்ப அழைத்துச் சென்று கரிசனையோடும் மிகுந்த பிரயாசையோடும் வளர்த்து காத்தார். இவ்விதமாய் வளர்க்கப் பட்டதால் நமது இரட்சகர் அர்ச். சூசையப்பருக்குக் கடனாளியாகி விட்டார் என்றே கூறலாம்.*

**மூன்றாவது : சேசுவின் மனுஷாவதாரத்தின் பரம இரகசியத்தின் மூலமாய் மனுமக்களுக்கு சர்வேசுரன் பொழிந்தருளும் உன்னத வரங்கள் விஷயமாகவும் அர்ச். சூசையப்பர் வகிக்கும் பதவி** *: என்னவெனில்,*

*சேசுவின் ஞான சரீரமாகிய திருச்சபையின் மட்டில் (உறுப்பினர்களாகிய நமது பேரில்) அர்ச். சூசையப்பருக்கு விசேஷ கவலை உண்டு. சேசுவை மிகுந்த கவனத்தோடும், கவலையோடும் அன்போடும் பாதுகாத்து வளர்த்ததில் உள்ளார்ந்த காரணம் உள்ளது. அது, நமது இரட்சண்யம் ஒன்றுதான். நமது இரட்சண்யத்துக்குத் தேவையான வரங்களுக்கெல்லாம் ஊற்றாக இருப்பது சேசுவின் மனிதாவதாரம் தான். இந்த சத்தியம் தேவ தூதருடைய வார்த்தைகளில் நன்கு விளங்குகிறது.* **"...***அவள் ஒரு குமாரனைப் பெறுவாள். நீர் அவருக்கு சேசு என்னும் நாமம் சூட்டுவீர், ஏனெனில் அவரே தமது ஜனத்தை அவர்களுடைய பாவங்களினின்று இரட்சிப்பார்***"** *(மத் 1:21). ஆகையால், இரட்சகர் நிமித்தம் சூசையப்பருக்கு நியமிக்கப்பட்டிருந்த ஸ்தானாதிபதி பதவி முடியவில்லை. இன்னமும் நடந்து கொண்டேயிருக்கிறது. ஏனெனில் சேசுவின் ஞான சரீரமாகிய (திருச்சபையின் மக்கள்) நமக்கு இரட்சண்யத்துக்கு அவசியமான வரங்களெல்லாம் அவர்தான் பெற்றுக் கொடுத்துக் கொண்டிருக்கிறார்.*

*எனவே, நமதாண்டவர் சேசு கிறீஸ்துவின் பாலத்துவத்தை தியானித்து மகிழ்ந்து கொண்டாடும் இந்த புத்தாண்டு துவக்கத்தில் அதனோடு இணைந்து நமது இரட்சண்யத்துக்கு உதவிய, இன்றும் உதவிக் கொண்டிருக்கும் நமது நேச தந்தை அர்ச். சூசையப்பரை நன்றியோடு சங்கித்து, நம்மை அவரது அடைக்கலத்தில் வைப்போமாக!*

**சேசு கிறீஸ்துவின் பாலத்துவத்தின் அர்ச்சிஷ்டவரான சூசையப்பரே, எங்களுக்காக வேண்டிக் கொள்ளும்!**

*- மரியாயே வாழ்க.!*

# நோபல் பரிசு பெற்ற மருத்துவரை மனந்திருப்பிய லூர்து புதுமை!

தேவதாய் காட்சியளித்த லூர்துபதியில் நடைபெற்றுவரும் அற்புதங்களும், புதுமைகளும் எண்ணிக்கையில் அடங்காதவை. மாதா காணப்பட்ட மசபியெல் கெபி அற்புத நீரூற்றிலிருந்து சுரக்கும் தண்ணீர் இன்றுவரை எத்தனையோ நோயாளிகளை குணமாக்கி வருவதை நாம் அறிவோம். இந்த அற்புத குணமாகுதல்கள் கொண்டு வரும் மனந்திரும்புதல்கள் ஏராளம்! ஏராளம்!!




அப்படி லூர்து கெபியில் தேவதாய் நிகழ்த்திய புதுமை கடவுள் மறுப்பு அறிவுவாதியும், (Agnostic) மருத்துவத் துறையில் நோபல் பரிசு பெற்றவருமான டாக்டர் அலெக்ஸிஸ் காரெல் **(Dr. Alexis Carrell)** என்பவரை மனந்திருப்பியது!

### கண்முன்னே நிகழ்ந்த புதுமை!

1902-ல் பிரான்ஸ் நாட்டின் லையோன் (Lyons) நகரின் மருத்துவ கல்லூரியின் மருத்துவரான **Dr.** அலெக்ஸிஸ் காரெல்லை அவரது மருத்துவ நண்பர் ஒருவர் லையோன் நகர நோயாளிகளை லூர்து நகருக்கு அழைத்துச் செல்லும் பணியில் உதவுமாறு அழைப்பு விடுத்திருந்தார். கத்தோலிக்க விசுவாசத்தில் வளர்க்கப்பட்டாலும் நாளடைவில் விசுவாசத்தை இழந்து கடவுள் மறுப்பு அறிவுவாதியாகிப் போன அவருக்கு கடவுள் நம்பிக்கையோ, புதுமைகள் பற்றிய விசுவாசமோ இல்லை. ஆனாலும், நண்பர் அழைக்கவே நோயாளிகளை இரயிலில் கொண்டு செல்லும் பணியில் உதவச் சென்றார்.

இரயிலில் அழைத்துச் சென்ற ஒரு பெண் நோயாளியான **மரி பெய்லி** (Marie Bailly) என்பவள், அவரது கவனத்தை ஈர்த்தாள். கடுமையான எலும்புருக்கி நோயால் (Acute tuberculous pentitiotis) பீடிக்கப்பட்ட அவளது வயிற்றுப்பகுதி முழுவதும் பாதிக்கப்பட்டு வீங்கி போய் உயிருகே அபாயமான நிலையில் லூர்து நகருக்குக் கொண்டு வரப்பட்டாள். பாதி நினைவிழந்து போன அந்த நோயாளியின் கரங்கள் ஜெபமாலையைப் பற்றியிருக்க அவளது உதடுகள் பலவீனமாக அசைந்து கொண்டிருந்தது. அவள் ஜெபித்துக் கொண்டிருக்க வேண்டும். அந்த நோயாளியின் நிலையைக் கண்ட **Dr.** காரெல் நிச்சயம் அவள் லூர்து நகர் செல்வதற்குள் இறந்து போவாள் என்று மனதில் நினைத்துக் கொண்டார். ஆனாலும், அந்த நோயாளியின் அசையாத நம்பிக்கையைக் கண்டு வியந்தார்.

இரயில் வண்டி, நோயாளிகளுடன் லூர்து வந்து சேரவே, உடனடியாக அவர்கள் தேவ அன்னை காட்சியளித்த மசபியேல் கெபிக்குக் கொண்டு செல்லப்பட்டார்கள். அவர்களை அங்கே கொண்டு செல்ல சிறு படுக்கை வண்டிகளோடு தன்னார்வத் தொண்டர்களும் கன்னியாஸ்திரிகளும் தயாராக இருந்ததைக் கண்டு மனம் நெகிழ்ந்தார்.

எனவே, தமது கவனத்தை ஈர்த்த மரிபெய்லி நோயாளியுடன், மருத்துவ உதவி தேவையானால் வழங்க **Dr.**காரெல்லும் சென்றார். லூர்து கெபி அடைந்ததும் அசாதாரணமான சூழ்நிலை நிலவ, பக்தியோடு லூர்து அற்புத தண்ணீரை குவளையில் கொண்டு வந்து, நோயாளியின் உப்பி வீங்கிப் போயிருந்த நோயாளின் வயிற்றின் மீது ஊற்றப்பட்டது. அற்புத நீர் வயிற்றுபகுதியை நனைக்க, நோயாளி ஒரு கடுமையான வலியை உணர்ந்தாள்: ஆனால், இரண்டாவது தடவை

அற்புத நீரை ஊற்றிய போது, அந்த வலி மெல்ல குறைந்து வருவதையும், மூன்றாவது தடவையாக ஊற்றிய போது ஒரு ஆனந்தமான உணர்வை உணர்ந்தாள். என்ன ஆச்சரியம்! வீங்கி போயிருந்த அவளது வயிற்றுப்பகுதி மெல்ல, மெல்ல வற்றிப்போக, அவளது இதயத்துடிப்பும் இயல்புநிலைக்கு வந்தது !!

நோயாளிக்குப் பின்னால், குறிப்புக்களை எடுத்துக்கொண்டிருந்த Dr.காரெல் தன் கண்முன்னே நிகழும் அற்புதத்தைக் கண்டு திகைத்துப் போனார். தமது குறிப்பேட்டில் "பெருவாரியாக வீங்கி, உப்பி கடினப்பட்டு போயிருந்த நோயாளியின் வயிற்றுப்பகுதி மெல்ல வற்றி தட்டையாகி போகத் துவங்கியது: 30 நிமிடங்களுக்குள் வீக்கம் மறைந்து உடல் ஆரோக்கியமான நிலையை அடைந்தது. உடலிலிருந்து எந்தவிதமான நீரோ, கழிவுகளோ வெளியேறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது…" என்று எழுதினார்.

இப்போது, உயிராபத்தில் இருந்த நோயாளி, மரிபெய்லி பூரண குணம் பெற்று படுக்கையிலி ருந்து எழுந்து அமர்ந்தாள். எந்தவிதமான சிரமமுமில்லாமல் கொடுக்கப்பட்ட உணவை உட்கொண்ட பின் தானாகவே, அந்த படுக்கை தள்ளு வண்டியிலிருந்து இறங்கினாள். தேவதாயின் செபியில் நன்றியோடு ஜெபித்த பின் ஓய்வெடுத்தாள். மறுநாள் இரயிலில் பயணித்து லையோன் நகர் திரும்பினாள்! பின்னர் மருத்துவர்களின் ஆராய்வுக்கு 4 மாதங்கள் உட்பட்ட அவள்; உடல் ரீதியாகவும், மனரீதியாகவும் பூரண இயல்பு நிலையில் இருப்பது உறுதி செய்யப்பட்டது.

லூர்து மாதாவால் பூரண குணம் பெற்ற மரிபெய்லி பிறர் சிநேக சகோதரிகளின் சபையில் உட்பட்டு, நோயாளிகளையும், ஏழைகளையும் பராமரிக்கும் சேவையில் தமது வாழ்வை



செலவிட்டு 1937-ம் ஆண்டில் தமது 58வது வயதில் பாக்கியமான மரணமடைந்தாள்.

தமது கண்முன்னே, மருத்துவ உலகால் கண்டுபிடிக்க முடியாத, அற்புத புதுமையைக் கண்ட Dr. காரெல்லின் விசுவாச கண்கள் திறக்க, உடனடியாக மனந்திரும்பினார். தாம் கண்ட புதுமையைப் பற்றி அறிக்கை வெளியிட்டார். பின்னர் அமெரிக்காவின் சிக்காக்கோ பல்கலைக் கழகத்திலும், பின்னர் ராக்ஃபெல்லர் பல்கலைக் கழகத்திலும் ஆராய்ச்சி பணியில் ஈடுபட்ட அவர், 1912-ல் தமது உறுப்பு மாற்று அறுவை சிகிச்சைக்கு வழிவகுக்கும் "Vascular anastomosis" என்ற துறையில், அவரது கண்டுபிடிப்பிற்காக நோபல் பரிசும் பெற்றார்.

தமது வாழ்நாளில், பல தடவைகள் லூர்துபதிக்கு சென்று வந்த Dr.காரெல் ஒரு 18 மாத கண்பார்வையற்ற சிறுவன் உடனடியாக பார்வை பெற்ற புதுமையையும் காணும் வாய்ப்பு பெற்றார். 1942-ல் தாம் கண்ட இரண்டு அற்புதங்களையும், அறிக்கையிட்ட அவர், கடவுள் மீதான தமது விசுவாசத்தையும், ஆன்மாவின் நித்திய வாழ்வையும், சத்திய கத்தோலிக்க திருச்சபையின் போதனைகளையும் தாம் ஏற்றுக் கொள்வதாக பகிரங்கமாக அறிவித்து, உத்தம கத்தோலிக்க வாழ்வு வாழ்ந்து 1942-ல் மரணமடைந்தார்.

ஆதாரம் : Fr. Spitzers contemporary Miracles associated with Bl. Mary, Saints and the Holy Eucharist - Magis Center 2017, Sep28. Network - Aleteia.

**பரிசுத்த லூர்து மலை மாதாவே, எங்களுக்காக வேண்டிக்கொள்ளும்!**

- மரியாயே வாழ்க.!

# ஜெபமாலையைப் பற்றிய பாத்திமா காட்சி பெற்ற சகோதரி லூஸியாவின் சாட்சியம்!



*பாத்திமா காட்சி பெற்ற சகோதரி லூஸியா கடைசியாக, 1957 டிசம்பர் 26-ம் தேதியன்று மெக்ஸிக்கோ நாட்டுக் குரு சங். அகுஸ்தீன் ஃபுவெந்தஸ் சுவாமிக்கு நீண்ட பேட்டியளித்தாள். அதில் ஜெபமாலையின் வல்லமையைப் பற்றி இவ்விதம் கூறினாள்:*

*". . . பாருங்கள் தந்தையே, நாம் வாழும் இந்தக் கடைசிக் காலங்களில், மகா பரிசுத்தக் கன்னிகை, பரிசுத்த ஜெபமாலையை ஜெபிப்பதற்கு ஒரு புதிய வல்லமையை வழங்கியுள்ளார்கள். அது எந்த அளவிற்கென்றால், ஒரு பிரச்சினை எவ்வளவு கடினமாக இருந்தாலும், நம் தனிப்பட்ட விஷயமாக இருந்தாலும், விசேஷமாய் ஞான காரியமாக இருந்தாலும், அல்லது நம் தனிப்பட்ட வாழ்வின் பிரச்சினையாக இருந்தாலும் சரி, குடும்பகளிலானாலும் சரி, ஜெபமாலையால் தீர்க்கப்படாத எந்த ஒரு பிரச்சினையும் இல்லை. நான் கூறுகிறேன் : ஜெபமாலை என்னும் ஜெபத்தால் தீர்க்கப்படாத அளவுக்கு கடினமான அல்லது பெரிய பிரச்சினை ஏதுவுமே கிடையாது. ஜெபமாலையைக் கொண்டு நாம், நம்மைக்காப்பாற்றிக் கொள்ளமுடியும் நம்மையே நாம் அர்ச்சித்துக் கொள்வோம். நமதாண்டவருக்கு ஆறுதலளிப்போம். அநேக ஆன்மாக்களின் இரட்சணியத்தையும் பெற்றுக் கொள்வோம். . ."*

(*ஆதாரம் :* The Fatima crusader No. 79)

*இந்த புத்தாண்டில் தினமும் தேவ இரகசியங்களைத் தியானித்தப்படி பக்தியோடு ஜெபமாலை ஜெபிப்பதாக உறுதி ஏற்போம்!*

## புனிதர் வாக்கு!

*என்னை இரட்சிப்பவர்களான என் தலைவியே ! நான் திடமுடன் இருப்பேன். பயப்பட மாட்டேன், ஏனென்றால் ஆண்டவரிடம் என் பலமும் புகழ்ச்சியும் நீரே!.*

*- அர்ச். பொனவெந்தூரார்*

## ஆத்துமம் தான் முக்கியமானது

அர்ச். அந்தோணி மரிய கிளாரெட் உயிருக்கு ஆபத்தாகும் அளவுக்கு நோய் முற்றிய போது, இரண்டு மருத்துவர்கள் அழைக்கப்பட்டார்கள். இதைக் கவனித்த அவர், தமது நோய் முற்றியதை உணர்ந்து கொண்டு, "எனக்குப் புரிகிறது; ஆனால் முதலில் நாம் என் ஆத்துமத்தைப்பற்றி யோசிப்போம். அதன்பின் தான் சரீரம்" என்று சொல்லிவிட்டார். உடனடியாக தேவதிரவிய அனுமானங்களைப் பெற விரும்பினார். அவற்றைப் பெற்றபிறகு, அவர் இரண்டு மருத்துவர்களையும் அழைப்பித்து, அவர்களிடம், "இப்போது நீங்கள் விரும்பியதைச் செய்யுங்கள்" என்றார்.

# மோட்சத்தில் நாம் சேர்ந்திருக்க முடியாது . .!



ஒரு சமயம் பங்குக் குருக்களின் பாதுகாவலரான அர்ச். ஜான் மரிய வியான்னியாரை புராட்டடஸ்ட்டாண்ட் மனிதர் ஒருவர் சந்திக்க வந்தார். அவர் பதித மதத்தவர் என்பதை அறியாத புனித குரு, தமது வழக்கம் போல் நமதாண்டவரைப் பற்றியும் அர்ச்சிஷ்டவர்களைப் பற்றியும் பேசிக் கொண்டிருந்தார்.

சந்திப்பு முடிந்தது. புறப்பட எழுந்த அந்த நபரிடம் அவரது வருகையின் நினைவாக ஒரு சிறு பதக்கத்தை (Medal) வழங்கினார். அதனை பெற்றுக் கொண்ட அந்த புராட்டடஸ்டாண்ட் நபர் "தந்தையே, உங்கள் கருத்தின்படி பதிதனான என்னிடம் பதக்கதை கொடுத்துள்ளீர்களே ஆனால், நாம் ஒரே மதத்தைச் சார்ந்தவர்களாக இல்லாவிட்டாலும், ஒருநாள் நாம் இருவரும், மோட்சத்தில் இருப்போம் என்று நம்புகிறேன்" என்று கூறினான்.

உடனே அர்ச்சிஷ்டவர் அந்த மனிதனின் கரத்தைப் பிடித்தவாறு, ஊடுறுவும் பார்வையால் அவரை கூர்ந்து நோக்கி, "ஐயோ! நண்பரே இந்த உலகில் சேர்ந்து ஒரே மதத்தைப் பின்பற்றாதவர்கள் மோட்சத்தில் சேர்ந்திருக்க முடியாது. மரம் எங்கே விழுகிறதோ அந்தப்பக்கம் தான் சாயும். " என்று இரக்கத்தோடு பதிலளித்தார்.

உடனே "ஆனால், தந்தையே" என்று இடைமறித்து பதிலளிக்கமுயன்ற அந்த நபர் "தன்னில் விசுவாசம் கொண்டிருப்பவன் நித்திய வாழ்வை கொண்டிருப்பான் என்று சேசு கிறீஸ்து சொல்லி யிருக்கிறாரே. அவர்மீது என் நம்பிகையை வைக்கிறேன்" என்று தயங்கியவாறு கூறினான்.

அதற்கு அர்ச். வியான்னியார் "சேசுகிறீஸ்து இதுதவிர வேறு அநேக காரியங்களையும் சொல்லியிருக்கிறாரே. திருச்சபையின் சொற்படி கேளாதவன் அக்கியானியைப் போல உனக்கு ஆகக் கடவான் என்றும் சொல்லியிருக்கிறாரே. அதோடு "ஒரே மந்தையும் ஒரே ஆயனுமாக இருப்பார்கள்" என்றும், தமது அந்த மந்தைக்கு தலைமை ஆயராக அர்ச். இராயப்பரையும் நியமித்துள்ளாரே. இதனையும் கூட ஏற்றுக் கொள்ள வேண்டுமல்லவா? இன்று இவ்வுலகில் அந்த ஒரே மந்தையும் அதன் தலைமை ஆயரும் எங்கே இருக்கிறார்கள்? அது கத்தோலிக்கத் திருச்சபையும், அதன் தலைமை ஆயரான பாப்பரசருமல்லவா? அதனை ஏற்றுக் கொள்ள வேண்டுமல்லவா?" என்று நயமாகப் பேசினார். அவரது குரலில் கழிவிரக்கம் மேலோங்கியிருந்தது. அம்மனிதன் தலை குனிந்தவாறு மறுப்புக் கூறாமல் சென்று விட்டான்.

அர்ச். ஜான் மரிய வியான்னியார் அம்மனிதன் சத்திய கத்.விசுவாசத்தைப் பெற ஜெபித்தார்.

## இணைந்தே இருப்பவர்கள்

ஒருமுறை லூர்துமாதா காட்சி பெற்ற அர்ச். பெர்னதெத்தம்மாளிடம் ஒருவர் தந்திரமான முறையில் கேள்வி கேட்டார் ; "உனக்கு எது அதிக மகிழ்ச்சி தரும். திவ்யநன்மை உட்கொள்வதா, அல்லது மெசபியேல் கெபியில் தேவ அன்னையை தரிசிப்பதா!" ஒரு கணம் யோசித்தவள், "என்ன ஒரு வினோதமான கேள்வி இது! இந்த இரண்டையும் எப்படிப் பிரிக்க முடியும்? சேசுவும் மாமரியும் எப்போதும் இணைந்தே இருக்கிறார்கள்" என்று பதிலளித்தாள்.

# ஆண்டவரே எங்களுக்கு அநேக பரிசுத்த கத்தோலிக்கக் குடும்பங்களைத் தாரும்

*நேயர்களே! இன்று நமது கத்தோலிக்கக் குடும்பங்கள் பசாசினாலும், அவனுடைய ஏவலர்களாலும் குறிவைத்து தாக்கப்படுகின்றன. இதனையே பாத்திமா காட்சிப் பெற்ற சகோதரி லூஸியா, இக்காலங்களில் கத்தோலிக்க குடும்பங்களை தாக்கி அழிப்பதில் சாத்தான் வெற்றி பெற்று வருகிறான். என்று கூறியுள்ளாள். அது எவ்வளவு உண்மை என்பதை நல்ல கத்தோலிக்க குடும்பங்கள் மிகக் குறைவான எண்ணிக்கையிலிருந்தே அறிந்து கொள்ள முடியும். நல்ல விசுவாசமுள்ள கத்தோலிக்க குடும்பங்கள் திருச்சபையை வளப்படுத்துகின்றன.*

*இப்பகுதியில் கத்தோலிக்க குடும்பத்தின் மேன்மை பற்றிய கட்டுரைகள் வெளியிடப்படும். அவை கத்தோலிக்க பெற்றோருக்கு பெரிதும் உதவும் என்பது நிச்சயம். (ஆர்.)*

## கத்தோலிக்கக் குடும்பத்தின் உயரிய நோக்கம்!



பெற்றோர்களே, நீங்கள் குடும்பத்தில் சர்வேசுரனால் அழைக்கப்பட்ட பரிசுத்த அழைத்தலை மேற்கொண்டிருக்கிறீர்கள் என்பதை நினைவில் கொள்வீர்களானால், உங்களது இல்லற வாழ்வில் பெரிய வெற்றியை அடைவீர்கள். ஒரு குருவானவரைப் போலவே, நீங்களும் கிறீஸ்துவின் பெயரால் உங்கள் குழந்தைகளுக்குக் கல்வி புகட்டி, வழிநடத்தி, அவர்களை அர்ச்சிக்க அழைக்கப்பட்டிருக்கிறீர்கள். இதனால் தான் வந். கர்தினால் பிரான்சிஸ் ஸ்பெல்மன், “சர்வேசுரன் அன்று பெத்லேகமில் திருக்குடும்பத்தை எப்படி நோக்கினாரோ, அப்படியே இன்றும் ஒவ்வொரு குடும்பத்தையும் அழியக்கூடிய சரீரத்தினுடைய துவக்கமாகவும், அழியாத ஆத்தமத்தின் பிறப்பிடமாகவும் காண்கிறார். மனித பிறப்பை பரலோக, பூலோகத்திற்கான சின்ன பிரஜைகளின் பிறப்பிடமாகவும் பார்க்கிறார்” என்று குடும்பத்தின் மேன்மையைப் பற்றி கூறுகிறார். ஆகையால், பெற்றோர்களாகிய உங்களது பணி ஒரு புனிதமான, ஞான அலுவலாக இருக்கிறது. நீங்கள் உங்கள் பிள்ளைகளை மருத்துவர்களாகவோ, வழக்குரைஞர்களாகவோ, விஞ்ஞானிகளாகவோ உருவாக்கலாம். ஆனால், உங்கள் பிள்ளைகள் மோட்ச இராச்சியத்தை அடையாமலோ அல்லது, அதற்குத் தேவையான வாய்ப்பு வழிமுறைகள் அவர்களுக்கு வழங்காமல் போயிருந்தால் நீங்கள் வெற்றி பெறவில்லை என்று தான் கொள்ள வேண்டும். பிள்ளைகள் நித்திய வாழ்வை அடைந்து கொள்ளச் செய்வது தான் உங்கள் பிரதான நோக்கம் என்பதை உணர்ந்து கொள்ளுங்கள். இந்தக் கண்ணோட்டத்தில் உங்கள் குடும்பத்தை நோக்குவீர்களானால் உங்கள் அழைத்தலின் அலுவலை முழுமையாக செய்ய வேண்டியதன் அவசியத்தை நன்கு உணர்ந்து கொள்வீர்கள்.

இந்த நவீன கால சமுதாயச் சூழ்நிலை குடும்ப வாழ்வில் பெரும் பாதிப்பை ஏற்படுத்தியுள்ளது. துரதிர்ஷ்டவசமாக, முந்தைய தலைமுறையினர் பெருமிதத்தோடு வாழ்ந்து உந்நத தலைவர்களை, கிறீஸ்தவர்களை உருவாக்கிய கத்தோலிக்கக் குடும்ப ஜீவியம் இன்று இல்லாமல் போய்விட்டது. இன்றைய நவீன தலைமுறையினர் தங்களது பெற்றோர்களின் வாழ்க்கை முறையை புறக்கணிக்கத் துவங்கிவிட்டனர். எப்படியெனில், அவர்கள் தங்களுக்கு அநேக உடன்பிறந்தவர்கள், சகோதர சகோதரிகள் இருப்பதை புகழ்கின்றனர். ஆனால் அவர்களைப் போல பெரிய குடும்பத்தை தாங்களும் கொண்டிருக்க வேண்டும் என்பதை கடினமானதாக உணர்ந்து எதிர்க்கிறார்கள். அதுபோன்று சில பெற்றோர்களும் கூட, தங்கள் பிள்ளைகள் கடின உழைப்பைக் கற்றுக் கொள்ள வேண்டும், பிறர்சிநேகத்தோடு உதவி செய்பவர்களாக இருக்க வேண்டும், சீரான அறிவும், நன்மை தீமைகளை பகுத்தறியும் திறனும், விசுவாசமும் கொண்டவர்களாகத் திகழ வேண்டும் என்று விரும்புகிறார்கள். இவைகளை அவர்களுக்கு வழங்குவதற்குத் தேவைப்படும் அனைத்தையும் செய்வதற்குத் தயங்குகிறார்கள். அதோடு கூட சில தம்பதியினர் கிறீஸ்தவ திருமணத்தின் மேன்மையான கருத்திலிருந்து எவ்வளவு தூரம் அகன்று சென்றுவிட்டார்களென்றால், அவர்கள் கிறீஸ்தவ பெற்றோர்கள் என்று அழைக்கப்படுவதற்கே அருகதையற்றவர்கள் ஆகிவிட்டார்கள்!.

இன்று குடும்பங்கள் புறக்கணிக்கப்பட்டு, தனிமனிதன் உயர்த்தப்படுகிறான். அவசரப்பட்டு மதியிழந்தவர்களாய் திருமணம் செய்து கொண்டுவிட்டு, பிறகு தங்களது சுய விருப்பு வெறுப்புக்கேற்ப அதைவிட்டு போய்விடுகிறார்கள். சிலர் வேண்டுமென்றே தங்களது வாரிசுகளின் (குழந்தை பேறு) எண்ணிக்கையை குறைக்கிறார்கள். இத்தகையோரது கருத்தடை மனப்பான்மை இவர்களது சேர்ந்து வாழும் வாழ்க்கையை வெறும் நட்பாகவோ அல்லது தங்களது இச்சையை திருப்திப்படுத்தும் வழியாக மட்டுமே கருத ஊக்குவிக்கிறது. அநேக சிறிய அளவான ஆனால் செழிப்பான குடும்பங்கள் வெறும் சுயநலத்தை மட்டுமே கொண்டதாக இருக்கிறது.

இன்று அநேக நவீனகால மனைவிமார்களும், கணவன்மார்களும் குடும்பத்தின்மட்டில், குழந்தைகளின்மட்டில் தங்களுடைய கடமைகளிலிருந்து விலகிச் செல்கிறார்கள். இதனால் குடும்பத்தில் பெரும் குழப்பங்களும், சஞ்சலங்களும் தோன்றுகிறன. இப்படியாகத் திருமண பந்தமானது ஞான ஒழுக்கமற்ற ஒன்றாக மாறிப்போய் விடுகிறது.

இச்சீர்கேடுகளுக்குக்கெல்லாம் காரணம், குடும்பங்களின் ஞானசம்பந்தமான - சுபாவத்துக்கு மேலான நோக்கங்கள் மறக்கப்பட்டு விட்டதே! அதனால் குடும்பங்கள் மதச்சார்பற்ற கலாச்சாரத்தால் பீடிக்கப்பட்டு தனிமனிதனின் சிற்றின்ப மகிழ்ச்சி ஒன்றையே நோக்கமாகக் கொண்டு அவைகளை நிறைவேற்றுவதிலேலே குறிக்கோளாகக் கொண்டிருக்கின்றன. அதோடு வேத சமயபற்றை மறுத்தல், கடவுளற்ற அறிவுவாதத்திற்கே முன்னுரிமையளித்தல் என்பது பொது ஸ்தாபனங்களில் குறிப்பாக, பள்ளிக் கூடங்களில் செயல்படுத்தப்படும் ஒன்றாகி வருகிறது. அதனால் பிள்ளைகள், தங்கள் பெற்றோரின் அதிகாரத்தையும் உரிமைகளையும் மறுத்தல் போன்ற அடாதக் குணங்கள் கொண்டவர்களாக வளர்கிறார்கள்.

## இத்தீமைகளுக்கு மருந்து – தீர்வு எது?

*விரிந்து பரவி வரும் இத்தகைய தீமைகளுக்கு மருந்து - தீர்வுதான் என்ன? நமது கத்தோலிக்க திருச்சபை இந்த மாதிரியான தீமைகளை திருத்தி குடும்பங்களை நெறிப்படுத்த 2000 ஆண்டுகளாக எவைகளை போதித்து வருகின்றதோ, அவற்றையே ஒவ்வொரு குடும்பமும் மேல்வரிச்சட்டமாகக் கொள்ளவேண்டும். அவை:*

1. *கிறீஸ்தவ மெய்விவாகத்தின் கௌரவத்தை அங்கீகரிப்பது.*
2. *கிறீஸ்துவில், கிறீஸ்துவுக்காக குடும்ப வாழ்வை வாழ்வதன் தீர்மானத்தில் உறுதியாயிருத்தல்.*
3. *குடும்ப வாழ்வின் புண்ணியத்தை, குடும்ப சமாதானத்தை அழிக்கும் உலக தன்மையை எதிர்த்து நிற்பதில் உறுதிகாட்டுவது.*
4. *நல்லொழுக்கத்திற்கு எதிரான தீமைகள் குடும்பத்தைத் தாக்காமல் பாதுகாப்பதில் உறுதி.*

*இந்த தமது போதனைகளை கத்தோலிக்க குடும்பங்கள் தங்களது நோக்கங்களாக கொண்டிருத்தலையே திருச்சபை ஆசிக்கிறது. இவற்றில் உங்கள் குடும்பம் ஊன்றியிருந்தால், புறத்தே - உங்கள் இல்லங்களுக்கு வெளியே எத்தகைய தீமைகள் சூழ்ந்திருந்தாலும் உங்கள் குடும்பம் சர்வேசுரனின் நிறைவான ஆசீர்பெற்ற உன்னத கிறீஸ்தவ குடும்பமாகத் திகழும்!*

**குடும்பங்களில் இராக்கினியே எங்களுக்குக்காக வேண்டிக்கொள்ளும்!**

---

## நற்கருணையில் நாம் யாரை உட்கொள்ளுகிறோம்?

*ஒரு சமயம் ஒரு ஆங்கில மாது தனது நான்கு வயது மகனுடன் அர்ச். 10-ம் பத்திநாதர் பாப்பரசரைப் பார்க்கச் சென்றிருந்தாள். பாப்பரசர் சற்று பேசிய பின்பு பையனைப் பற்றி விசாரித்தார். அதற்கு அந்த தாய் இன்னும் இரண்டு அல்லது மூன்று வருடத்தில் புதுநன்மை வாங்குவான் என்று கூறினாள்.*

*பாப்புவின் அருகில் இருந்த சிறுவன் அவருடைய முழங்காலில் சாய்ந்து கொண்டு அவர் மார்பில் அணிந்திருந்த சிலுவையை கையிலெடுத்து விளையாடத் தொடங்கினான்.*

*"நற்கருணையில் நாம் யாரை உட்கொள்கிறோம்?" என்று பாப்பு சிறுவனைக் கேட்டார்.*

*"சேசு கிறீஸ்துவை" என்றான் சிறுவன்.*

*"சேசு கிறீஸ்து யார்?"*

**"சேசு கிறீஸ்து கடவுள்"** *என்று உடனே பதிலளித்தான் அச்சிறுவன். அதனால் மகிழ்ச்சியடைந்த பாப்பரசர் மறுநாள் தமது கரத்தால் புதுநன்மை வழங்க சிறுவனை அனுமதித்து, ஆசீரளித்தார்!.*

# மண் சிவந்தது!!

## (அர்ச். அருளானந்தரின் வேதசாட்சியம்)



### கொலை களம் நோக்கி!

*1693-ம் ஆண்டு பிப்ரவரி 4-ம் நாள். கதிரவன் கோபாவேசத்தோடே தீக்கற்றைக் கதிர்களால் பூமியை சுட்டெரித்துக் கொண்டிருந்த மதிய நேரம். அங்கே அந்த ஆளரவமற்ற.* **ஓரியூர்** *திட்டையிலே ஒரு பலி நிகழ்ந்தது! அருளானந்தசுவாமி என்று தன்னையே விரும்பி அழைத்துக் கொண்ட* **சங். ஜான் டி பிரிட்டோ. சே.ச சுவாமிகள்** *அங்கே கொண்டு வரப்பட்டார். வெண்ணிறக் கரங்கள் பின்புறமாய் கட்டப்பட்டிருக்க காவலர்கள் அவரை இழுத்துக் கொண்டு வந்தார்கள்.*

*கடந்த சில நாட்களாக தாம் பட்ட கொடுமைகளின் பாதிப்புக்களின்றி நிர்மலமான முகமுடையவராக, மிகுந்த உற்சாகப் பெருக்குடன் கம்பீரமாக நடந்து வரும் அவரிடம் எந்தவிதமான அயற்சியோ, கலக்கமோ இல்லை! கடந்த நாட்களிலே அவர்பட்ட துன்ப அவமானங்கள்தான் எத்தனை! 40 மைல் கல் தூரத்திற்கு கற்களும், முட்களும் அவரது மெல்லிய பாதங்களையும் உடலையும் குத்திக் காயப்படுத்த, இழுபட்டு வந்த வேதனைகள் தான் எத்துணை! ஊருக்கு ஒதுக்குப்புறமாக இருந்த கிணற்றில் தலைகீழாகக் கட்டி இறக்கி மூழ்கடித்து அவர்பெற்ற சித்திரவதைக் கொடுமைகள் தான் என்ன!! மன்னர் கிழவன் சேதுபதியின் வீரர்களின் கடுமையான பேச்சும், ஏச்சும் தந்த அவமானம் தான் எத்தகையது? ஆனாலும், இன்று அவரது முகத்திலே முந்தைய நாட்களின் கொடுமைகளின் அடையாளங்கள் எதுவுமே காணப்படவில்லையே! இது தான் வேதசாட்சிகளின் திடனா? அதன் இரகசியம் தான் என்ன?!*

*இழுத்துக் கொண்டு வரப்பட்ட சுவாமி, ஏறிட்டு ஓரியூர் மணல் திட்டை நோக்கினார். அங்கே, அந்த மணற்குன்றின் உச்சியிலே, கூரிய முனையுடன் கழுமரம் நாட்டப்பட்டிருந்தது. அதுவே அவரது சிலுவை மரம்! அவரது பலி பீடம்!! அவரது மனம் உவகையால் நிறைந்தது. தாம் எவ்வளவு ஆவலோடு காத்திருந்த பெரும் பேறு கடைசியில் இன்று வந்து சேர்ந்ததே என்று எண்ணி மகிழ்ந்த அவரது உள்ளம் நன்றியால் சர்வேசுரனை துதித்தது. திடனுக்காக மன்றாடியது. . . சுற்றிலும் பார்த்தார். அங்கே, இப்போது மக்கள் மெல்ல மெல்லக் கூடத்துவங்கியிருந்தார்கள். அவர்களுள், தனது அன்புக்குரிய, புதுக்கிறீஸ்தவர்கள் பதைபதைக்க மிகுந்த வேதனையோடு நின்று*

கொண்டிருப்பதைப்பார்த்தார். அவர்கள் வாயடைத்துப் போய் . . . எதுவும் செய்வதறியாது திகைத்துப் போய் கண்ணீர் பெருக்கெடுத்து ஓட நிற்பது அவருக்குப் புரிந்தது. அங்கே தான் மிகவும் நேசிக்கும் இரு மறவ கிறீஸ்தவ இளைஞர்கள் "சுவாமிக்கு பதிலாக எங்களைக் கொல்லுங்கள்!" என்று இரைந்து கத்தியவாறு ஓடிவருவதையும், முரட்டுப்படைவீரர்களால் தடுத்து அடக்கப்படுவதையும் கண்டு புன்முறுவல் பூத்தார்.

நடப்பவற்றைக் காண, வினோதப் பிரியத்தால் வேடிக்கைப் பார்க்க வந்திருந்த இந்து மக்களில் சிலர் முகத்தில் ஆச்சரியம் பொங்க "என்ன! இந்த வெள்ளைக்கார சாமி, ஏதோ விருந்துக்குப் போவது போல அல்லவா செல்கிறார்?! கொல்லப்படப் போகிறோம் என்ற அச்சமும், பயமும் எதுவும் அவரிடம் இல்லையே? இதை எங்கே போய்ச் சொல் . . ல. . . ?!" என்று எண்ணியவாறு வாய்பிளந்து வியந்து நின்றிருந்தனர். அவர்களது மனமும் அவருக்காக இரங்கத்தான் செய்தது! "ஆனாலும் இது அரசன் கிழவன் சேதுபதியின் கட்டளையல்லவா? புது வேதத்தை போதித்து வந்த இந்த வெள்ளைக்கார சாமி, நல்லவர் தான். எவ்வளவு நல்லது செய்திருக்கிறார்!. அவரால் நாம் அடைந்த நன்மைகள் எத்தனை. நிகழ்ந்த புதுமைகள் தான் எத்தனை!! இருந்தாலும் இந்த தாதியத் தேவருக்கு இது வேண்டாம்! . . . அவர் கிறீஸ்தவ வேதத்துக்கு மாறிவிட்டாராமே? அதனால் ஐந்து மனைவியரில் மூத்தவளை மட்டும் ஏற்றுக் கொண்டு மற்றவர்களை ஒதுக்கிவிட்டாரமே? ! . . என்ன அக்கிரமம்?! அவர்களை சகோதரிகளாய் பாவிக்கப் போகிறாராமே! இது என்ன புதுசு! இதில் இளையவள் சேதுபதியின் மருமகளாயிற்றே! வந்தது வினை!! அதுதான் இதற்குக் காரணம். இந்த வெள்ளைக்கார சாமி தான் காரணம் என்று அவரை இப்படிக் கொல்ல உத்தரவிட்டுள்ளாள் சேதுபதி. . . ஆனால், இந்த பரங்கி பண்டார சாமி எவ்வளவு நல்லவர்! அவரை நமது தெய்வங்களால் கூட ஒன்றும் செய்ய முடியவில்லையாமே . . ?!" என்றெல்லாம் தங்களுக்குள் பேசிக் கொண்டு, இரக்கத்தோடும், ஒருவித தவிப்போடும் அவரையே பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

## வேதசாட்சிய முடி!

உச்சிவெயில் மண்டையைப் பிளக்க, அருளானந்த சுவாமி கால்கள், மணலில் புதைபட நடக்கிறார். அப்பொழுது கூட்டத்திலிருந்து ஒரு குரல், "என்ன ! மரண தண்டனைக்குச் செல்பவர் காலில் மிதியடிகளுடன் செல்கிறாரே? இது முறையல்லவே! " என்று கேட்க, உடனே தாம் அணிந்திருக்கும் மிதியடி குறடுகளை (மரக் காலணிகள்) கழற்றி உதறிவிட்டு, தகிக்கும் அந்த சுடுமணலில் வெறுங்கால்கள் புதைய நடந்து கழுமரம் நடப்பட்டிருந்த உச்சிக்குச் சென்று அவ்விடத்தை முத்தமிட்டார். முழங்காலிட்டு மௌனமாக செபித்த அவரது ஆன்மா தமக்கு இந்த அரிய வேதசாட்சிய பாக்கியத்தை வழங்கிய ஆண்டவருக்கு நன்றி கூறியவராக, தாம் இறுதிவரை இதில் பிரமாணிக்கமாக இருக்கும் வரத்தைக் கேட்டு மன்றாடினார். தமது புது கிறீஸ்தவர்களுக்காகவும், மறவ நாட்டின் மக்கள் விசுவாச ஒளி பெற உருக்கத்தோடு ஜெபித்தார்.

*அந்த இறுதி நேரத்திலும் மிகுந்த ஆனந்த பரவசத்தில் திளைத்த சுவாமியின் முகம் பரலோக ஒளியால் பிரகாசிப்பதைக் கண்ட வேத விரோதிகளும், அஞ்ஞான மக்களும் வியந்து போயினர். புன்முறுவல் பூத்துக் குலுங்கும் அவரது முகத்தை அவர்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. "என்ன? மரணபயம் என்பதே இவரிடம் இல்லையே?!" என்று ஆச்சர்யப்பட்டனர். ஆனால், கிறீஸ்தவர்களோ, "அய்யோ! சுவாமி!" என்று மனதினுள் அரற்றி துக்கம் கொண்டு கண்ணீர் சொரிய அவரையே பார்த்துக் கொண்டிருந்தனர்.*

*சுவாமி அருளானந்தர் தன்னைக் கொல்ல ஆணைப்பிறப்பித்த இராமநாதபுரம்* **மன்னன் கிழவன் சேதுபதிக்காகவும்**, *தண்டனையை நிறைவேற்ற ஓலை அனுப்பிய* **உதய தேவனுக்காகவும்,** *தீட்டிய வாளுடலும் கொடிய தோற்றத்துடனும் காட்சியளித்த* **கொலைஞன் பெருமாளுக்காகவும்** *செபித்தார். "பிதாவே! இவர்களை மன்னியும்! ஏனெனில், இவர்கள் செய்வது இன்னதென்ன அறியார்கள்" என்று மன்றாடினார்.*

*தமது பரிவாரங்களோடு தண்டனை நிறைவேற்றத்தைப் பார்வையிட வந்த சிற்றரசன் உதயத்தேவன் காலம் தாழ்த்தப்படுவதை அறிந்தவன், தன் மகனை அனுப்பி விரைவில் தண்டனையை நிறைவேற்றப் பணித்தான். இதை உணர்ந்த சுவாமிகள் எழுந்து சற்று தள்ளி நடந்து சென்று அங்கே முழந்தாழிட்டார். பின் நிமிர்ந்து பெருமாளிடம் "நான் தயாராகி விட்டேன்! இனி, நீ உன் கடமையைச் செய்யலாம்" என்று கூறினார்.*

*உடனே அருகில் நின்றிருந்த போர்வீரன் ஒருவன், அவரது நீண்ட தாடியை ஒரு கயிற்றினால் கட்டி, அக்கயிற்றை உடம்போடு சேர்த்துக் கட்டினான். தலையை வெட்டியதும், அது நெஞ்சின் மேல் தொங்க வேண்டும் என்பதற்காகவே அவ்வாறு செய்தான். பின்னர் அவரது நீண்ட அங்கியை, இடுப்பு வரை களைந்தான். அப்பொழுது அவரது வெண்ணிற கழுத்திலே இருந்த ஓர் அருளிக்க கயிற்றைக் கண்டான். திடுக்கிட்டவனாய், "ஆ! அது மந்திரக் கயிறு! அது அவரது கழுத்தில் இருக்கும் வரை அவரைக் கொல்ல முடியாது" என்று எண்ணியவனாக, தன் வாளால் அக்கயிற்றை அறுத்தான். வாள் அவரது கழுத்தில்பட்டு... சுர்ரென்று வலி ஏற்படுத்த ... பூமியில் முதல் சொட்டு இரத்தம் சிந்தியது! சுவாமிகள் அதனை தமது முதல் காணிக்கையாக பரமபிதாவுக்கு ஒப்புக் கொடுத்தார்.*

*. . . எல்லாம் தயாராகியது : முழந்தாளிட்டபடியே குனிந்து தனது கழுத்தைக் காட்டிய சுவாமியின் உள்ளம் தாம் இன்னும் சில கணத்திலே அடையவிருக்கும் பேரின்ப பாக்கியத்தை நினைத்துப் பூரித்தது. கொலைஞன் பெருமாள், மனதைக் கல்லாக்கிக் கொண்டான், அருள் சுரக்கும் சுவாமியின் முகத்தைக் கண்டு நடுங்கிய அவன், அதை மீண்டும் பார்க்க அஞ்சினான். அவனது கரிய நெடிய முரட்டு தேகம் மெல்ல நடுங்கியது! ஆஹா! "நாம் எத்தனையே குற்றவாளிகளுக்கு தலையைத் துண்டித்து மரண தண்டனையை நிறைவேற்றியுள்ளோமே, ஆனால், இன்று மட்டும் ஏன் தமது மனம் இப்படி தயங்குகிறதே? ஐயோ! இந்த பண்டாரச் சாமியிடம் எந்தக் குற்றமும்*



காணவில்லையே, ஆனாலும் என்ன செய்வது? அரச ஆணையல்லவா" என்றெல்லாம் சிந்தித்தவன் சற்று கண்களை மூடியவனாக "சாமி கடவுளே, என்னை மன்னித்து விடு!" என்று கூறியவாறு தன் கரங்களில் ஏந்தியிருந்த கூரிய நீண்ட கனமான வாளை, உயரே மேலே . . ஆகாயத்தில் தூக்கினான். பின் தன் முழுபலத்துடன் கீழே, சுவாமியின் கழுத்தில் இறக்கினான். கூரிய அந்த ஆயுதம் ஆழமாய் விழுந்து தலையைத் துண்டித்தது. செங்குறுதி பீறிட்டு அடித்து அந்த தேரி மணல் மேட்டை நனைத்து செம்மண்ணாக்கியது! சிறிது நேரத்தில் உடல் துடித்து அடங்கியது. சுவாமியின் தலை, முன்பக்கமாய் சரிந்து தொங்காமல், பின் பக்கமாய் சாய்ந்து தனது ஆன்மா சென்றதைக் சுட்டிக் காட்டும் மேரையாக விண்ணோக்கி மலர்ந்த வண்ணம் காணப்பட்டது!.

பின்னர் அவரது உடல் களையப்பட்டு (கைகால்கள் வெட்டித் துண்டிக்கப்பட்டு) 10 அடி தூரத்திலிருக்கும் கழுமரத்தில் தொங்கவிடப்பட்டது. அவரது புனித உடலிலிருந்து கடைசி சொட்டு இரத்தமும், தண்ணீரும் சொரிந்து அந்த கழுமரத்தில் வடிந்து அதனை நனைத்து அந்த பூமியை செம்மையாக்கி புனிதப்படுத்தியது. அன்றிலிருந்து இன்றுவரையிலும் அந்த ஓரியூர் திட்டையைச் சுற்றிலும் உள்ள மணல் புதுமையாக இரத்த மணலாக - செம்மணல் பூமியாக மாறிப்போனது!. அவர் சிந்திய இரத்தத்துளிகள் அப்பகுதி மக்களுக்கு இரட்சண்ய விதைகளாக மாறின. அவர் தலைகீழாக கட்டி இறக்கப்பட்டு வாதிக்கப்பபட்ட ஊருக்கு ஒதுக்குப் புறமாக இருக்கும் கிணறு மட்டும் இன்றும், புதுமையாக அமிர்தசுவை நீர் வழங்கி அந்த ஊரையே நிறைவிக்கிறது.

. . . மரியாயின் நிலமாம் போர்த்துக்கல் தேசத்திலே பிறந்து, அர்ச். சவேரியாரைப் போலவே ஆன்ம தாகத்தால் பற்றியெரிந்து, இந்தியாவில் அதுவும் தமிழ்நாட்டின் மறவர் தேசத்தில் ஓரியூரில் சத்திய வேதத்துக்காக வேதசாட்சிய முடி பெற்ற அர்ச். அருளானந்தர் வேதசாட்சிய மடைந்து **329** ஆண்டுகள் கடந்தும், இன்னமும் ஆன்மாக்களை இரட்சிக்க, சத்திய கத்தோலிக்க வேதம் பரவ ஜெபித்துக் கொண்டே இருக்கிறார்.!

ஆதராம் : 1. The Red Sand
2. ஓரியூரின் ஒளிவிளக்கு

**மறவர் தேசத்து மாணிக்கமாம், வேதசாட்சியான**
**அர்ச். அருளானந்தரே, எங்களுக்காக வேண்டிக்கொள்ளும்.**

- மரியாயே வாழ்க.!

# மனந்திரும்பிய முன் மாதிரிகை!

வண. பேராயர் மெல்மில்லாடு ஆண்டகை ஒரு நல்ல வழக்கத்தைக் கடைப் பிடித்து வந்தார். இரவு படுக்கைக்குச் செல்லும் முன்பு திவ்விய நற்கருணை ஆண்டவரை சந்தித்து நன்றி செலுத்துவதே அது. அதோடு பேராலயத்தின் கதவுகள் நன்கு தாழிடப்பட்டிருக்கிறதா என்று பார்த்துவிட்டு, நற்கருணை பீடத்துக்கு முன் முழந்தாளிட்டு தாழ்ச்சியின் அடையாளமாக தரையை முத்திசெய்து, நற்கருணையை ஆராதித்து பின் எழுந்து தமதறைக்குச் செல்வது வழக்கம்.

ஒருநாள் தமது வழக்கம்போல இரவில் தேவாலயத்திற்கு வந்து திவ்விய நற்கருணை ஆண்டவரை ஆராதித்து, தமது பக்தி முயற்சிகளை முடித்து எழுந்தவர், தமக்குப் பின்புறமாக எழுந்த சப்தத்தைக் கேட்டு துணுக்குற்றார். திரும்பியவர் திகைத்து போனார். அங்கே பாவசங்கீர்த்தனப் பெட்டியின் கதவுகளைத் திறந்து ஒருபெண் உருவம் வெளி வந்தது! அது அந்நகரில் வசித்து வரும் ஒரு பெரிய இடத்து மாது. புராட்டடஸ்டாண்ட் மதத்தினள்.

“இந்த நேரத்தில் நீங்கள் இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் அம்மா?” என்று பேராயர் ஆர்வத்தோடு கேட்டார்.

அதற்கு அப்பெண்மணி, “ஐயா நான் ஒரு புராட்டடஸ்டாண்ட் மதத்தினள். நீங்கள் தபசு காலத்தில், பீடத்தின் தேவ திரவிய அனுமானத்தில் சேசுகிறீஸ்துவின் உண்மைப் பிரசன்னத்தைப் பற்றி பிரசங்கம் நிகழ்த்தினீர்கள். நானும் அதைக் கேட்டேன். உங்கள் வாதத்திறமையால் நீங்கள் அளித்த காரணங்களெல்லாம் எனக்கு ஏற்புடையதாக இருந்தது. அந்த சத்தியத்தை மனப்பூர்வமாக நான் ஏற்றுக் கொள்கிறேன். ஆனால், எனக்கு ஒரு சந்தேகம் மாத்திரம் இருந்தது. அது என்னவென்றால் தான் போதிப்பதை அவரே நம்புகிறாரா - இல்லையா? என்பது தான்.

“நற்கருணைக்கு முன் நீங்கள் தனித்திருக்கும் பொழுது எவ்விதம் நடந்து கொள்கிறீர்கள் என்று பார்க்க ஆசித்தேன் உங்கள் போதனையின்படி நீங்கள் நடப்பதைக் கண்டால், நான் நிச்சயம் மனந்திரும்ப வேண்டுமென்று தீர்மானித்தேன். இப்பொழுது நானே அதைப் பார்த்து விட்டேன். நான் ஒரு கத்தோலிக்கப் பெண்ணாக மாற விரும்புகிறேன்” என்று கூறி அவரிடம் ஆசீர்பெற்றாள். அவள் கூறியதைப் போன்றே சில காலத்தில் கத்தோலிக்க ஞானஸ்நானம் பெற்றாள். அந்த பெண் அந்த ஜெனிவா நகரிலுள்ள அனைத்து கத்தோலிக்கர்களிலும் அதிக பக்தியுடையவளாகத் திகழ்ந்தாள்.

இந்த பேராயர் நற்கருணையில் கடவுளை ஆராதித்தார். தமது தினசரி விசுவாசம், நம்பிக்கை, தேவ சிநேகம் இவற்றைக் கைக்கொண்டு தினமும் செபித்தார். அவரது ஆராதனை எவ்வளவு எதார்த்தமானதென்றால், அது ஒரு ஆத்துமத்தை கத்தோலிக்க திருச்சபைக்கு கொண்டு வந்தது.!

**போதனை :**

நமது தேவ ஆராதனை, விசுவாசம், நம்பிக்கை, தேவசிநேகம் சில வேளைகளில் வெறும் வாடிக்கையானதாக இருக்கிறதா? கத்தோலிக்கர்கள் தாங்கள் விசுவசிப்பதை போதிக்க வேண்டும் வார்த்தைகளால் மட்டுமல்ல, ஆனால் தங்களது எடுத்துக் காட்டால்! அப்படி செய்தார்களென்றால் சத்திய வேதத்துக்கு பலர் மனந்திரும்புவர் என்பது நிச்சயம்!

– மரியாயே வாழ்க.!



# மாதாவின் சூசை அச்சக புத்தக டிப்போவில் கிடைக்கும் ஞானப் புத்தகங்கள்



PH : 0461 -2361989

| | | விலை ரூ. | தபாலில் விலை ரூ. |
|---|---|---|---|
| 1. | பாரம்பரிய திருக்குடும்ப பக்திமாலை | 220.00 | 260.00 |
| 2. | உலகின் இறுதிக்காலங்கள் | 125.00 | 140.00 |
| 3. | திருப்பாடுகளின் வரலாறு | 120.00 | 125.00 |
| 4. | அனுதின ஜெபப் புத்தகம் | 50.00 | 60.00 |
| 5. | திருப்பாடுகளின் தியானம் | 90.00 | 100.00 |
| 6. | அறிவோம் பத்துக்கட்டளைகளை | 100.00 | 110.00 |
| 7. | மலைமேல் பிரசங்கம் | 65.00 | 70.00 |
| 8. | அறிவோம் அப்போஸ்தலர்களை; அர்ச். பிலவேந்திரர் | 90.00 | 100.00 |
| 9. | ஞான உபதேசக் கோர்வை (3 பாகங்கள்) | 325.00 | 350.00 |
| 10. | மன்ரேசா (அர்ச். இஞ்ஞாசியாரின் தியானப் பிரசங்கங்களின் தொகுப்பு) | 125.00 | 140.00 |
| 11. | கிறீஸ்துநாதர் அநுசாரம் | 150.00 | 160.00 |
| 12. | மரியாயின் மீது உண்மை பக்தி | 125.00 | 140.00 |
| 13. | பாத்திமா காட்சிகள் | 100.00 | 110.00 |
| 14. | பாவசங்கீர்த்தனத்தின் இரகசியம் | 60.00 | 70.00 |
| 15. | சேசுவின் திருநாமத்தின் அதிசயங்கள் | 35.00 | 40.00 |
| 16. | கற்பு என் பொக்கிஷம் | 60.00 | 70.00 |
| 17. | என்னைப் படி அல்லது வருத்தப்பட்டு (உத்தரிக்கிற ஆன்மாக்கள் பற்றியது) | 30.00 | 35.00 |
| 18. | ஞான உணர்த்துதல் | 40.00 | 45.00 |
| 19. | Read Me or Rue It | 60.00 | 70.00 |
| 20. | என்னைப் படிக்காவிட்டால் நீ வருத்தப்படுவாய் | 75.00 | 80.00 |
| 21. | கத்தோலிக்க வேத சத்தியங்கங்கள் | 45.00 | 50.00 |
| 22. | இதுதான் பாத்திமா செய்தி, இதுவே பரிகார பக்தி | 35.00 | 40.00 |
| 23. | ஞான சரீரம் | 35.00 | 40.00 |
| 24. | சலேத் இரகசியம் | 35.00 | 40.00 |
| 25. | மரியாயின் இரகசியம் | 30.00 | 35.00 |
| 26. | தேவ இரகசிய ரோஜா மாதா காட்சிகள் | 30.00 | 35.00 |
| 27. | The Penny Catechism | 35.00 | 40.00 |
| 28. | அமலோற்பவ மாமரியின் போரணி | 40.00 | 45.00 |
| 29. | அன்னையை நேசிக்க பன்னிரு படிகள் | 30.00 | 35.00 |
| 30. | மரியாயின் மாசற்ற இருதய பரிகார பக்தி முயற்சிகள் | 25.00 | 30.00 |
| 31. | முத்துக்குளித் துறையின் முதல் ஆயர் (வந். ரோச் ஆண்டகையின் வரலாறு) | 30.00 | 35.00 |
| 32. | மோட்சம், நரகம், உத்தரிக்கிற ஸ்தலம் | 35.00 | 40.00 |
| 33. | திவ்விய பலிபூசையின் அதிசயங்கள் | 35.00 | 40.00 |
| 34. | வியாகுல மாதா பக்தி | 35.00 | 40.00 |
| 35. | தலைவெள்ளி, முதல் சனி பக்தியும், ஜெபமாலையும் அனுசரிக்கும் முறை | 20.00 | 25.00 |
| 36. | உத்தரிக்கிற ஸ்தலத்துக்கு அனுதின யாத்திரை | 12.00 | 15.00 |
| 37. | காவல் சம்மனசானவர் | 10.00 | 10.00 |
| 38. | சிலுவைப்பாதை | 15.00 | 1500 |
| 39. | பரிசுத்த ஆவி ஜெபம் | 6.00 | 7.00 |
| 40. | சேசுவின் திரு இருதய மந்திரமாலை | 6.00 | 7.00 |
| 41. | தேவமாதாவின் மந்திரமாலை | 10.00 | 12.00 |
| 42. | அர்ச். சூசையப்பர் பக்திமாலை | 10.00 | 12.00 |
| 43. | அர்ச். சூசையப்பரின் மாந்தை நவநாள் | 8.00 | 12.00 |
| 44. | ஆதித் திருச்சபையின் பத்து வேதகலாபனைகள் | 10.00 | 12.00 |
| 45. | திருச்சபையின் கட்டளைகள் | 10.00 | 12.00 |
| 46. | சேசுவின் இரக்க பக்தி | 10.00 | 12.00 |
| 47. | அர்ச். பிலோமினம்மாள் ஜெபப் புத்தகம் | 10.00 | 12.00 |
| 48. | தேவ அழைத்தல்கள் | 35.00 | 40.00 |
| 49. | சின்னக் குறிப்பிடம் | 10.00 | 12.00 |

| | | விலை ரூ. | தபாலில் விலை ரூ. |
|---|---|---|---|
| 50. | அன்பிரவு (பரிகாரத் திருமணி ஜெபப் புத்தகம்) | 25.00 | 30.00 |
| 51. | மனச்செபம் ஒரு விளக்கம் | 35.00 | 40.00 |
| 52. | புதுநன்மைப் புனிதை (முத்திப்பேறு பெற்ற இமெல்டா வாழ்க்கை வரலாறு) | 70.00 | 75.00 |
| 53. | பரலோக எச்சரிப்பு (2 புத்தகங்களின் தொகுப்பு - அந்தோனி சேவியர்) | 60.00 | 65.00 |
| 54. | ஜெபமாலையின் இரகசியம் (அர்ச். லூயிஸ் மோன்போர்ட் எழுதியது) | 80.00 | 90.00 |
| 55. | மரியாயின் மாசற்ற இருதய வெற்றியின் உதயம் | 35.00 | 40.00 |
| 56. | 33 நாள் தயாரிப்பு: தேவமாதாவுக்கு முழு அர்ப்பணம் செய்யும் முறை (தியானங்களுடன்) | 50.00 | 60.00 |
| 57. | இறுதிக்கால யுகம் | 100.00 | 115.00 |
| 58. | அர்ச். பத்தாம் பத்திநாதர் வாழ்க்கை வரலாறு | 100.00 | 115.00 |
| 59. | புதுமைப் புனிதர் தந்தை பியோ | 200.00 | 220.00 |
| 60. | வேத விளக்கம் : ஆசிரியர் : வீரமாமுனிவர் (சங். ஜோசப் பெஸ்கி, சே.ச.) | 150.00 | 160.00 |
| 61. | அன்பின் அரசர் | 150.00 | 160.00 |
| 62. | நரகம் | 60.00 | 65.00 |
| 63. | அர்ச். ரீத்தம்மாளின் ஜீவிய சரித்திரம் | 12.00 | 15.00 |
| 64. | தேவமாதாவின் பிரார்த்தனை விளக்கம் | 150.00 | 160.00 |
| 65. | புதிய நட்சத்திரம் பிலோமினா | 60.00 | 65.00 |
| 66. | அர்ச். பாஸி மரிய மதலேனாள் | 85.00 | 90.00 |
| 67. | அர்ச். ஜெர்த்ரூத்தம்மாள் | 45.00 | 50.00 |
| 68. | ஜெபமாலை ஜெபிப்பது எப்படி? | 10.00 | 12.00 |
| 69. | திருமணி ஆராதனை | 30.00 | 35.00 |
| 70. | A Brief History of St. Mary Magdalene de Pazzi, Carmelite and Mystic | 50.00 | 55.00 |

## பிப்ரவரி-மார்ச் மாதங்களின் முதல் சனி பக்தி முயற்சியின் பரிகாரக் கருத்துகள்

**பிப்ரவரி :** தேவமாதா கடவுளின் தாய் என்ற சத்தியத்தை மறுக்கும் நிந்தைகளுக்குப் பரிகாரமாக.

**மார்ச் :** தேவமாதாவின் நித்திய கன்னிமையை மறுக்கும் நிந்தைகளுக்குப் பரிகாரமாக.

## அன்பான வாசகர்களின் கவனத்திற்கு

1. மணியார்டர் பாரத்தில் உங்கள் தொலைபேசி / அலைபேசி எண்ணைக் குறிப்பிடுங்கள்.
2. மாதா பரிகார மலரை உங்களுக்குத் தெரிந்தவர்கள், உறவினர்கள், நண்பர்களுக்கு அறிமுகப்படுத்தி பரப்ப உதவுங்கள். (எங்களுக்கு உதவி செய்கிற உங்கள் அனைவரின் ஆன்ம சரீர நலன்களுக்காகவும் தினமும் எங்கள் ஜெபத்தில் வேண்டுகிறோம்.)
3. மாதா பரிகார மலர் ஆண்டு சந்தாவை இன்னும் புதுப்பிக்காதவர்கள் உடனே அதைப் புதுப்பித்து நம் பத்திரிகை நல்ல முறையில் வெளிவர எங்களுக்கு உதவும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறோம். வருட சந்தா - ரூ. 150/- கூடுதல் தபால் செலவு ஆகிறது. நேயர்கள் உதவி செய்யும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.
4. மாதா பரிகார மலர் சாந்தா, காணிக்கை மற்றும் புத்தகங்களுக்கு மட்டும் கீழ்கண்ட பெயரில் உங்கள் மணியார்டர்கள், D.D.s. மற்றும் காசோலைகளை அனுப்புங்கள்.

A/c Name : SOCIETY OF APOSTLES OF MARY
No. 31423199505 - IFS Code : SBIN 0008145
State Bank of India, Kanthasamypuram Branch. Tuticorin

**அனுப்ப வேண்டிய முகவரி :**
**மாதா அப்போஸ்தலர்கள் சபை,**
**ரோஸா மிஸ்திக்கா,**
**11/519 சகாயமாதா பட்டணம், 2-வது தெரு, வி.வி.டி. மேல்நிலைப் பள்ளி எதிரில், தூத்துக்குடி - 628002.**
**போன் : 0461 2361989, அலைபேசி : 9487609983.** Email : tutirosamystica@gmail.com

**சந்தா, நன்கொடை செலுத்த :**

**Google Pay 9487609983**

# உலக ஜெயராக்கினி சகாயமாதா ஆலயம்



கட்டப்பட இருக்கும் ஆலயத்தின் தோற்றம்



ஆலயத்தின் தற்போதைய கட்டுமான தோற்றம்

பாத்திமாவில் தேவ மாதா கேட்டுக் கொண்டுள்ளபடி மரியாயின் மாசற்ற இருதய பரிகாரப் பக்தியை (முதல் சனி பக்தி) கடைப்பிடித்து பரப்புவதும், மரியாயின்மீது உண்மையான பக்தியை பரப்புவதும், அர்ச். லூயிஸ் மரிய மோன்போர்ட் முறைப்படி மாதாவுக்கு முழு அர்ப்பணம் செய்யும் பொருட்டு 33 நாள் தயாரிப்பைக் கடைப்பிடிக்கச் செய்து மாதா அப்போஸ்தலர்களை ஏற்படுத்துவதும், சேசுவின் திரு இருதய பக்தியை (தலைவெள்ளி பக்தி) பரப்பவும், ஜெபமாலை மற்றும் உத்தரியத்தின் மீதான பக்தியைப் பரப்பவும், ஜெபத்தையும், தவத்தையும், பரிகாரத்தையும் மக்கள் கடைப்பிடித்து வாழச் செய்வதையும், நல்ல கத்தோலிக்க புத்தகங்களை வெளியிட்டு, ஞான உபதேச அறிவையும், விசுவாசத்தையும், தேவ சிநேகத்தையும் வளர்ப்பதும் எங்கள் சபையின் நோக்கமாகும்.

**ஆலயத்தை கட்டி முடிக்க தேவையான தொகை ₹ 57,50,000/-** (575 x ₹10,000/-
1150 x ₹ 5,000) = ₹ 57,50,000/-
**ஒரு சதுர அடி ₹ 2800/-**
**மொத்த சதுர அடி (Sq. ft.) 4200**
**தங்களது உதவியை வேண்டுகிறோம்.**


**முகவரி**
மாதா அப்போஸ்தலர்கள் சபை,
(Society of Apostles of Mary)
11/519, சகாயமாதாபட்டணம், தூத்துக்குடி.
தொலைபேசி: 0461 2361989 அலைபேசி: 94876 09983
E-mail: tutirosamystica@gmail.com


**வங்கி விபரம்**
**Account Name: Society of Apostles of Mary**
**Account No. 121802000000473**
**IFS Code: IOBA0001218**
**Indian Overseas Bank,**
**Mappilaiyurani Branch, Thoothukudi.**



## அர்ச்சிஷ்ட செபஸ்தியாரை நோக்கி ஜெபம்

அர்ச்சிஷ்ட செபஸ்தியாரே, கொள்ளை நோய் பஞ்சம், நெருப்பு, புயல், வெள்ளம், தீராத நோய்கள், விபத்து, பூமி அதிர்ச்சி - கொரோனா ஆகிய தீமைகள் எமக்கு நேரிடாவண்ணம் தேவ திருச்சமூகத்தில் பாவிகள் எங்களுக்காக மன்றாடும்.

- 1 பர - 1அருள் - 1 திரி

**திருவிழா: ஜனவரி - 20**

மாதா பரிகார மலரில் விசுவாசத்திற்கோ, நல்லொழுக்கத்திற்கோ, கத்தோலிக்க திருச்சபைக்கோ அதன் போதனைகளுக்கோ உண்மையான பக்திக்கோ மாறுபாடான எந்தக் கருத்தும் வெளிவராது.
– மாதா பரிகார மலர் குழு

**MATHA PARIKARA MALAR**
**ROSA MYSTICA**
**(Opp. V.V.D. H. Sec. School)**
**SAHAYAMATHAPATTANAM**
**TUTICORIN - 628 002.**
**PH: 0461 - 2361989**
E-mail: tutirosamystica@gmail.com

மாதா பரிகார மலர்
ரோஸா மிஸ்திக்கா
வி.வி.டி. மேல்நிலைப்பள்ளி எதிரில்,
சகாயமாதாபட்டணம்
தூத்துக்குடி மேலூர் போஸ்ட் - 628 002
போன்: 0461 - 2361989

To

Printed, Published and owned by: S. Michael Joseph Kennedy , Managing Trustee cum Secretary of Society of Apostles of Mary & Keeper of Mathavin Susai Achagam (Printing Press), 11/519, 2nd Street, Sahayamathapattanam, Melur (P.o), Tuticorin District, Tamil Nadu.
Printed at: Mathavin Susai Achagam (Printing Press), C/o, Society of Apostles of Mary, D.No 11/510, 2nd Street, Sahayamathapattanam, Melur (P.o), Tuticorin - 628 002. Tuticorin Dist., Tamil Nadu.
Published at: Society of Apostles of Mary, 11/510-1, Rosamystica 2nd Street, Sahayamathapattanam, Melur (P.o), Tuticorin - 628 002. Tuticorin Dist., Tamil Nadu.
Editor: Sammanasu Francis, C/o, Society of Apostles of Mary, 11/519, 2nd Street, Sahayamathapattanam, Melur (P.o), Tuticorin - 628 002. Tuticorin Dist., Tamilnadu.